# படத்துக்கு ஒரு புதுக்கவிதை!




இந்தப் படத்துக்கு ஏற்ப எட்டு அல்லது பத்து வரிக்கு மேற்படாமல் ஒரு தபால் கார்டில் புதுக் கவிதை எழுதி அனுப்புங்கள். பிரசுரமானால் சன்மானம் உண்டு. முடிவு தேதி ஜூலை 27. கடிதப் போக்கு வரத்து, திருப்பி அனுப்புதல் இல்லை. ''படத்துக்கு ஒரு புதுக் கவிதை'' என்று தலைப்புத் தரவும்.

'மாஸ்கோ நியூஸ்' வார இதழ் நடத்திய சர்வதேச ஜிம்னாஸ்டிக்ஸ் போட்டியில் பரிசு பெற்ற அல்லா மிஸ்னிக் ஏழாவது வகுப்புப் படிக்கும் பள்ளிக்கூட மாணவி.

தகவல்: சாருகேசி

புகைப்படம், நன்றி : சோவியத் செய்தித்துறை

# வட்டமேஜை



பிரதமர் இந்திரா காந்தியை விமரிசிக்கும் முறை மிகவும் குரூரத்தனமாக இருக்கிறது. மக்கள் விரும்பினால், எந்தக் குடிமகனும் பிரதமராக மட்டுமல்ல — ஜனாதிபதியாகக் கூட வரலாம் என்பது தங்களுக்குத் தெரியாதது அல்ல. அந்த நிலையில் வாரந்தோறும் வெறுப்பை உமிழ்கின்றீரே, இது நியாயம் தானா?

ராஜபாளையம் எஸ். டி. ராஜன்

ராஜீவ் காந்திக்கு உங்களது அட்வைஸ் நளினமாகவும் நாகரிகமாகவும் இருந்தது. அதன்படி அவர் நடப்பார் என்ற 'நம்பிக்கை'யுடன் நாம் கவனிப்போம்.

ஈரோடு-1 ஆ. இளமுருகு

கார்ட்டூன்கள் ஒவ்வொன்றும் மிகச் சிறப்பாக இருந்தது. 'எரிசாராய விசாரணை', ராஜீவ் வெற்றிக்கு வாழ்த்துப் பற்றிய கார்ட்டூன்கள் அருமை அருமை. ஒரு பக்கத் தலையங்கத்தில் சாதிக்க வேண்டியதை கால் பக்கக் கார்ட்டூன் மூலம் சாதித்து விடுகிறார் உமாபதி.

மதுரை-1 ரா. ராமன்

துப்பாக்கியால் சுடப்பட்ட அந்த நேரத்தில் போப் ஆண்டவர் முகத்தில்தான் எத்தனை சாந்தம்! 'நியூஸ் வீக்' இதழிலிருந்து மிகத் தெளிவாகத் தமிழாக்கம் செய்திருக்கிறார் திரு குட்டி கிருஷ்ணன். சிதைந்து போயிருந்த பகுதிகளைச் சீரடையச் செய்ய டாக்டர்கள் எடுத்துக்கொண்ட சிரமங்கள் மெய் சிலிர்ப்பாகவும் வியப்பாகவும் இருந்தது.

பெங்களூர்-5 டி.ஏ. லலிதா

பழக் கடைக்கு வயது 50 கட்டுரையும், கார்ட்டூனும் பிரமாதம். 'நகைச் சுவைக் கனிகளே' உதிர்த்துவிட்டன. மிகவும் ரசித்துச் சுவைத்தேன்.

கண்ணம்பாளையம் ஷீபா

கடுகு பதில்கள் பகுதியில் குமரி அனந்தனிடம் மிளிரும் பண்பு நலன்கள் யாவை என்னும் கேள்விக்கு ''என்றும் தொண்டனாக இருக்கும் தலைவர் அவர்'' என்ற துல்லியமான விடை, என்னைப் போன்ற இலக்கியச் செல்வரின் தொண்டர்தம் செவியில் இன்பத் தேன் பாய்ந்ததைப் போன்றிருந்தது.

அரூர் ஜே. சாரங்கபாணி

'கமல் வந்திருக்கிறார்' என்பதால் பரபரப்போ ஆர்ப்பாட்டமோ இல்லாமல் இன்முகத்துடன் வரவேற்று உபசரித்து எங்களுக்கும் அறிமுகம் செய்வித்த அந்தக் குடும்பத்தினருக்கும் சலன், பாஸ்கருக்கும் நன்றி!

சென்னை-4 மயிலை கோபி

பழக்கம், குழப்பம், தரிசனம் கதைகள் ஒவ்வொன்றும் போட்டி போட்டுக் கொண்டு எழுதியிருப்பது போல எழுதியிருந்தார்கள் கதையின் ஆசிரியர்களான வேதா, விஜுதா, சாலி. பாராட்டுக்கள். கல்கிக்கும்.

திம்மராஜபுரம் என். ராமகிருஷ்ணன்

தந்தை வயதுள்ள பெரியவர், மகள் வயதுள்ளவளை 'அனுகும்' கருக்கொண்ட கதைகள் ஆயிரம் வந்துள்ளன. ஆயினும் ஜே. எம். சாலியின் தரிசனம் பிரத்தியேக ஒருமைப்பாட்டுடன் சிறப்பாக வித்தியாசப் பட்டு நின்றது.

தக்கலை (குமரி) எஸ். லீலா இராம்

மீ. ப. சோமு எழுதும் ''ரசிகமணி ரசித்த மணிகள்'' வாசகர்களை ரசித்துப் படிக்க வைக்கும் வைர மணிகளாக அமைந்துள்ளன.

வடலூர் வெ.லட்சுமிநாராயணன்

சுமார் ஒன்றரை வருஷங்களுக்கு முன்னர் என் வீட்டில் திருட்டு நடந்ததும் அதைப் பற்றித் தங்கள் பத்திரிகை உட்பட பல பத்திரிகைகள் எழுதியதும் ஞாபகமிருக்கும். ஒன்றரை வருடங்கள் ஆகியும், திருடியவர்கள் பிடிபட்டும், திருட்டுப்போன நகைகள் இன்னும் எனக்கு வந்து சேரவில்லை. இது விஷயமாக கேஸை சரியாக நடக்காமல் இருக்கிறது. எல்லா உயர் போலீஸ் அதிகாரிகளையும் சந்தித்தாகி விட்டது; பலன் இல்லை. முதல்வருக்கும் ஒரு கடிதம் எழுதினேன், பதில் இல்லை.

சென்னை-20 நாடோடி

(தலைப்பு கார்ட்டூன் நன்றி: வாஷிங்டன் போஸ்ட்

**தந்தை: காலேஜ் திறந்தாகி விட்டது. என்ன செய்யறதா உத்தேசம்?**

**பையன்: திரும்பவும் எப்படி மூடலாம்னு ஐடியா பண்ணப் போறேம்! -நிவேதாமூர்த்தி**

# அகப்பட்டுக் கொண்டார்கள்!

இந்தவாரம் அகப்பட்டுக் கொண்டவர்கள்:

✕ எஸ். வி. ரமணன் >





✕ துரைரத்தினம்



✕ ஜப்பான்குப்பு



✕ ஜாம்பியாவில் அதிசய பழக்கம் பற்றிக் கூறினார் சீனிவாசன்

இருபத்தி நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறையே நடைபெறும் அகில இந்திய போலீஸ் விளையாட்டுக்கள் சென்னையில் நடந்த போது அதை டாக்குமெண்டரி படமாகத் தயாரித்திருக்கிறார் எஸ். வி. ரமணன். இதில் பதின்மூன்றுக்கு மேற்பட்ட பல மாநிலங்களிலிருந்தும் போலீஸ் துறையைச் சேர்ந்த விளையாட்டு வீரர்கள் பங்கு கொண்டார்கள்.

ஐந்து நாள் இரவும் பகலும் படப் பிடிப்பு நடந்தது. விளையாட்டுக்களில் ஆயிரத்தி இருநூற்றி ஐம்பது நபர்கள் பங்கு ஏற்றதுடன் ஒரே நேரத்தில் வெவ்வேறு போட்டிகள் இருந்ததால் பல படப்பிடிப்பு யூனிட்டுகள் தேவைப்பட்டன. திரைப் படத் தயாரிப்பாளர் பாலாஜி ரொம்பவும் உதவினார். மொத்தம் பதினைந்தாயிரம் அடிகள் படமாக்கி, அதை எடிட் செய்து மூவாயிரம் அடியாகக் குறைத்துள்ளனர். ஹைஸ்பீட் கேமரா உதவியுடன் கலரில் எடுக்கப்பட்ட முதல் டாகுமெண்டரி இந்தியாவில் இதுதான். முப்பத்தி மூன்று நிமிடங்கள் ஓடுகிறது. சென்ஸார் போர்டு ஒரு கல்விப் படமாகக் கருதி சான்றிதழ் அளித்திருக்கிறது. - 'சிக்கி'

யாழ்ப்பாணம் அச்சுவேலியைச் சேர்ந்த திரு துரைசிங்கம் துரை ரத்தினம் வித்தியாசமான வண்ணங்களை உடைய நெல்மணிகளை அட்டையில் ஃபெவிகால் போன்ற பசை கொண்டு ஒட்டி உருவாக்கியுள்ள சித்திரங்கள் ஏராளம். விநாயகர் படத்தில் தொடங்கி, புத்தபிரான், இயேசுநாதர், ஜிம்மி கார்ட்டர், ஜெயவர்த்தன போன்ற எத்தனையோ பிரமுகர்கள்.

கோயில் மடத்தில் நெல்லைக் காயப் போட்டிருந்தார்கள். மாலை நேரத்து வெய்யிலில் பட்டு நெல் மணிகள் ஜொலித்தன. அதைக் கவனித்தபோதுதான் நெல் மணியால் சித்திரங்கள் அமைக்கும் யோசனை தோன்றியது.

சமீபத்தில் இவர் உருவாக்கியுள்ள படம் காஞ்சிப் பெரியவர்களின் திரு உருவம். 2' × 3' அளவிலான இந்தப் படம் உருவாக இருபத்து மூன்று நாட்கள் பிடித்துள்ளன.

''வியாபார ரீதியில் மன நிறைவு ஏற்படாது. ஆத்மார்த்தமான கலை ஈடுபாட்டுடன்தான் இதைச் செய்கிறேன்'' என்று கூறும் கலைஞர், இந்த நெல்மணிப் படங்களை வைத்துக் கண்காட்சி நடத்தவும் ஆவல் கொண்டிருக்கிறார். — பெல்பால்

நடிகர் கமலஹாசனுடனும், நடிகை ஸ்ரீதேவியுடனும் சேர்ந்து நடித்த சிறுவன் தற்பொழுது மதுரையில் இட்டிலி வியாபாரம் செய்து வருகிறார். அந்த நடிகர் வேறு யாருமல்ல. 'கல்யாணராமனி'ல் நடித்துள்ள ஜப்பான் குப்புதான். - திசை. முத்து

நூலகத் தலைவர், கென்யா, ஜாம்பியா ஆகிய ஆப்பிரிக்க நாடுகளில் சுற்றுப் பயணம் செய்தபோது, உடன் சென்றவர்களுள் ஒருவர் வானொலி நிலைய நிருபர் திரு சீனிவாசன். அவர் சொன்னார்:

கென்யாவில் காண்டாமிருகங்களுக்கு இரட்டைக் கொம்புகள். இவை அபூர்வமானவை.

ஜாம்பியா தலைநகரான லுஸாகா விமான நிலையத்தில் ஆண், பெண், மற்றும் குழந்தைகள் பல வண்ண உடைகளில் தம் நாட்டு பூர்வீக நடனமாடினர். இது அவர்களது வரவேற்பு முறையாம்.

இங்கு 'பெல்லி டான்ஸ்' ரொம்ப பாப்புலர். சிறு குழந்தைகள் முதல் கிழவியர்வரை இடுப்பை வேகமாக அசைத்து நடனமாடி, வியப்பில் ஆழ்த்துகின்றனர்.

இங்குள்ள ஒரு சட்டம் — சம்பளத்தில் எழுபத்தைந்து சதவீதம்தான் ஆண்களிடம் தரப்பட வேண்டும். மீதி இருபத்தைந்து சதவீதம் குடும்பத்தாரிடம்தான் தரப்பட வேண்டும். சம்பளத் தினத்தன்று வீட்டிலிருந்து மனைவியோ மற்றவரோ வந்து வாங்கிச் செல்கிறார்கள்! - எஸ். சந்திரமௌலி


பலே! மாஸ்கோ விஜயத்திற்கு ரெடி பண்ணிக்கப் போயிருக்கு!
பிரஸ்னேவ்
`ஹரிஜா'வுடன் பேசினது தப்பு!..
`ஹரிஜா'வுடன் பேசினது தப்பு!


ஐயோ பாவம், ஹரிஜனங்கள்! தமிழ்நாடு போலீஸ் கிட்டேயிருந்து அவங்களுக்குப் பாதுகாப்பே கிடைக்கல்லே!
அப்ப ஒரு காரியம் பண்ணலாமே? தமிழ் நாடு போலீஸை சிலோனுக்கு `டிரெய்னிங்' அனுப்பலாமே?...
ராமநாத-புரம்


சதாசிவம் கமிஷன்


ரே கமிஷனுடன் ஒத்துழைப்பு

# வெற்றிகரமான தோல்வி!

விம்பிள்டன் கோப்பையை விஜய் இந்தியாவுக்குக் கொண்டு வந்து விடுவார் என்று யாருமே எதிர்பார்க்கவில்லை. குவார்ட்டர் ஃபைனல்ஸ் வரை அவர் வந்து விட்டார், அமெரிக்காவின் ஜிம்மி கோனர்ஸைச் சந்திக்கப் போகிறார் என்று அறிந்தபோதே நமக்குப் பெருமை தாங்கவில்லை. கழுத்தின் பின்புறம் ஜில் லென்று சூடேறக் குஷியாக விசிலடித்துக் கொண்டுதான் பள்ளிக்கோ, கல்லூரிக்கோ, காரியாலயத்துக்கோ சென்றோம்.

அதன் பிறகு ஜிம்மி கோனர்ஸை அவர் ஸெண்டர் கோர்ட்டில் சந்தித்ததும், போராடியதும் ஒரு காவிய ரசமுள்ள நிகழ்ச்சியாகி விட்டது. விஜய் தோற்றார் என்பது மெய்தான். ஆனால் அது எப்படிப்பட்ட தோல்வி? மாபெரும் வெற்றி கரமான தோல்வி! மெட்ராஸ் பாஷையில் கூறுவதென்றால்,

கோனர்ஸுக்குத் தண்ணி காட்டிய தோல்வி!

மூன்றரை மணிநேரம் விடாப்பிடியாகப் போராடினார் விஜய். அந்தப் போராட்டத்தை பிரிட்டிஷ் பத்திரிகைகள் பத்தி பத்தியாக விமர்சித்தன; புகழ் மாலைகளைக் குவித்தன. வெற்றி பெற்ற கோனர்ஸை விடவும் தோல்வியுற்ற விஜய்க்கு அதிகமான பாராட்டு!

''விஜய்யின் ஆட்டத்திறனைக் கொண்டாட இன்று இரவு என் வீட்டில் மெட்ராஸ் பாணி மசாலா சமையல்தான்'' என்று குதூகலிக்கிறார் ஒரு விளையாட்டு நிருபர். ''கிரிக்கெட் மட்டைக்குப் பதில் டென்னிஸ் மட்டையுடன் ரஞ்சித் சிங்கே வந்து விட்டாரா?'' என்று வியந்து போற்றுகிறார் இன்னொருவர்.

முதல் இரண்டு ஸெட்டுகளில் விஜய்க்குத்தான் வெற்றி. பிறகுதான் ஜயலக்ஷ்மி கோனர்ஸுக்கு அருளினாள். ஏன் விஜய்யினால் தொடர்ந்து வெற்றி பெற முடியவில்லை? ''ஆரம்பத்தில் இருக்கும் உடல் சக்தியை விஜய் சீக்கிரமே இழந்து விடுகிறார், கடைசி வரை அவரால் தாக்குப்பிடிக்க முடியவில்லை'' என்பது சில நிருபர்களின் அபிப்பிராயம். ஆனால் 'தம்' இல்லை என்பதை விடவும் முக்கியமான காரணத்தை வேறு சில நிபுணர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்:

''இன்றைய டென்னிஸுக்குத் தேவையான முரட்டுத்தனமும் அடாவடித் தனமும் அவரிடம் இல்லை. விஜய் கோபம் கொள்வதில்லை, ஆத்திரப்படுவதில்லை, ஆவேசத் தாக்குதல் நடத்துவதில்லை, அதனால் ஆட்டம் இழக்கிறார்!

''எதிராளி ஒரு நல்ல ஸ்ட்ரோக் அடித்தால் அதைச் சகித்துக் கொள்ளக் கூட முடியாத டென்னிஸ் வீரர்களே மலிந்து வரும் இந்நாளில் விஜய் பாராட்டிக் கைதட்டி மகிழ்கிறார்! கோனர்ஸ் அடித்த ஒரு பந்தை நோக்கி 'கோட்டுக்கு வெளியே போய் விழும்மா கண்ணு!' என்பது போல் ஜாடை காட்டி ரசிகர்களைச் சிரிக்கப் பண்ணுகிறார்!''

விளையாட்டுக் கலையைப் பயில்பவர்கள் பிறரிடமும் அந்தக் கலையைக் கண்டு ரசிக்க வேண்டும், எதிரியின் ஆற்றலை மதிக்க வேண்டும், கனவானாகத் திகழ வேண்டும், நட்பை வளர்க்க அந்தக் கலையைப் பயன் படுத்த வேண்டும் என்கிற உன்னத நோக்கமெல்லாம் இன்று மாறி வருகிறது. கண்ணியமின்றி மட்டையைத் தரையில் போட்டு அடித்து மிதித்தேனும் எதிரியை வெலவெலக்கச் செய்து விட வேண்டும், நடுவரை அபாசமாகவைதேனும் வெற்றியைத் தட்டிப் பறித்து விடவேண்டும் என்ற எண்ணங்கள்தான் மலிந்து வருகின்றன.

இந்தச் சூழலில் விஜய் விளையாட்டு என்பதன் மெய்யான நோக்கத்தை உலகுக்கு உணர்த்துவதே போல் நடந்து கொண்டு தமக்கும் பாரதத்துக்கும் பெருமை சேர்த்திருக்கிறார்.

1981 ஜூலை 12

துன்மதி ஆனி 28

மலர்: 39 இதழ்: 50



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# மாதாஜிக்கு ஜே!

"**ஸ்ரீ**மதி இந்திரா காந்தியை சதா குறை கூறுகிறீர்கள்; அவரைப் பாராட்டவே உங்களுக்குத் தெரியவில்லை" என்று கல்கி ஆசிரியருக்கு இந்த வாரம் இரண்டு கடிதங்கள் வந்துவிடவே, அவர் தனியாய்த் தவித்து என்ன செய்வது என்று புரியாமல் கையைப் பிசைந்து கொண்டிருந்தார். யதேச்சையாக அந்தச் சமயம் பார்த்து நான் அவரைக் காணப் போய்ச் சேர்ந்தேன். விஷயத்தைத் தெரிந்து கொண்டதும், "பூ இவ்வளவு தானே! இந்திரா காந்தி அவர்களைப் பாராட்ட எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன; கவலைப்படாதீர்கள், நான் எழுதித் தருகிறேன்!" என்று அபயம் அளித்துவிட்டு வந்து இதோ எழுதிக் கொண்டிருக்கிறேன். இதைப் படித்துப் பார்த்துவிட்டு கல்கி ஆசிரியர் "ஹைய்யா!" என்று ஒரு குதி குதித்து ஆனந்தத்துடன் பிரசுரிக்கப் போகிறார் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை!



-செம்பியன்-

இந்திராவை ஏன் பாராட்ட முடியாது? உதாரணத்துக்கு இப்போதுதான் இந்தியா வந்துவிட்டுப் போயிருக்கும் சீன அயல் விவகார மந்திரி ஹுவாவுடன் நடந்த பேச்சு வார்த்தைகளையே எடுத்துக் கொள்ளுங்கள். ஏற்கனவே இந்தியாவிடமிருந்து சீனா பிடித்து வைத்துக் கொண்டிருக்கும் பதினாலாயிரம் சதுர மைல் நிலப் பரப்பு தவிர மேலும் ஒரு சதுர அங்குலம் கூட சீனாவுக்கு விட்டுக் கொடுக்காமல் வெற்றிகரமாகப் பேச்சு வார்த்தைகளை நடத்தி முடித்திருக்கிறாரா இல்லையா? இதற்காகப் பிரதமரைப் பாராட்டக்கூடாதா?ஏன் இதற்குப் பூரண ஒத்துழைப்புத் தந்த நமது அயல் விவகார மந்திரி நரசிம்ம ராவையும் சேர்த்தே வாழ்த்தலாமே!



அப்புறம் நேருஜியால் கூட நிறைவேற்ற முடியாத ஒரு காரியத்தை இந்திரா செய்து காட்டியுள்ளாரே. அதற்காக அவரைப் பாராட்டக் கூடாதா? நேருஜி உயிருடன் இருந்த காலத்திலேயே நேருஜிக்குப் பின் யார் என்ற கேள்வி எழுந்தது- ஆனால் நேருஜி பாவம், கடைசிவரை இதற்குப் பதில் அளிக்கவே தெரியாமல் திணறினார். ஆனால் இந்திராவைப் பாருங்கள்! இப்படி ஒரு கேள்வி எழவே இடமில்லாமல் செய்துவிட்டார்! தேச மக்கள் எதிர்காலப் பிரதமர் யார் என்பது பற்றிக் கவலையில் ஆழ்ந்து போவார்களே என்று, கருணையுடன் தடுத்தாட்கொண்ட இந்திரா காந்தி அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். அவரது முன் யோசனைதான் நமக்கெல்லாம் அல்சர் வராமல் காப்பாற்றியிருக்கிறது. கவலையினால்தான் குடல் புண் வருகிறது என்று டாக்டர்கள் சொல்கிறார்களே!

சமீபத்திய ரே கமிஷனையே எடுத்துக்கொள்ளுங்கள். ஓய்வு பெற்ற ஒரிஸ்ஸா உயர்நீதி மன்றப் பிரதம நீதிபதிக்கு மறுபடி உத்தியோகம் தந்திருக்கிறாரே என்பதற்காக மட்டும் நான் இந்திராவைப் பாராட்டவில்லை. அதைவிடவும் பெருந்தன்மையுடன் கேரள

தமிழக மாநிலங்களில் பெரும்பாலான அரசு ஊழியர்களும் அதிகாரிகளும் சம்பளம் வாங்கிக்கொண்டே விடுமுறை அனுபவிக்க வழி வகுத்திருக்கிறாரே அதற்காகவும் பாராட்டுகிறேன்! லஞ்ச ஊழல் விசாரணை என்று வந்து விட்ட பிறகு, இந்த அரசு நீடிக்குமா இல்லையா என்பதே சந்தேகத்துக்குள்ளான பிறகு யாருக்குத்தான் வேலை செய்ய மனம் வரும்? இத்தனை நாளாக கோப்புக்களைத் தூசு தட்டியாவது வைப்பார்கள்; இனி சிலந்திக் கூடு கட்டவே அனுமதிக்கலாம். ஜாலி! இந்திராஜி வாழ்க!

கர்நாடகாவில் தபால் தந்திகளை வி.ஐ.டி.கள் திறந்து படிக்கின்றனரே என்று புகார் கிளம்பியபோது முதல்வர் குண்டுராவ், ''அதனால் என்ன? 1885, 1898ம் ஆண்டுகளின் சட்டங்கள் இதற்கு இடம் தருகின்றனவே'' என்று சொல்லியிருக்கிறார். பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தின் அநீதியான சட்டங்களைப் பற்றி இன்றைய தலைமுறையினருக்குத் தெரியவே தெரியாதல்லவா? ஆட்சி நடத்தும் விதத்திலேயே சரித்திரப் பாடமும் போதிக்கும் குண்டு ராவையும் இத்தகைய திறமையாளரை அண்டை மாநிலத்துக்கு முதல்வராக வழங்கிய பிரதமர் இந்திராவையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும்.



## Geo-Stationary

அண்டவெளியில் அலைந்த
ரோஹிணியின் ஆவிகண்டு
அரண்டு மிரண்டு போய்
அப்படியே நிலைத்தது
ஃப்ரான்ஸில் பழுத்த
இந்திய ஆப்பிள்!

—புவனச்சந்திரன்

'விம்பிள்டனில் யார் ஜெயிப்பார்கள்?' என்று பெட் கட்டுகிறார்கள், பிரிட்டனிலே' அதற்கு நாம் ஒன்றும் குறைந்து போய்விடவில்லை என்பது போல் வட மாநிலங்கள் பலவற்றில் 'இன்று மழை பெய்யுமா, பெய்யாதா?' என்று சூதாடுகிறார்கள்! சென்னையிலோ 'இன்று டீ.வி.யில் செய்தி வாசிக்கப் போவது ஆணா, பெண்ணா? ஆணானால் தாடிக்காரரா, க்ஷவரம் செய்து கொண்டவரா?' என்பதிலெல்லாம் சூதாட்டம் நடக்கிறது! இதற்கெல்லாம் ஊக்கம் அளிக்கும் வகையில் மாநில அரசுகள் லாட்டரிச் சீட்டு விற்பனையில் போட்டியிடுகின்றன. கடைசி செய்தியின் படி நமது மத்திய, விமானப் போக்கு வரத்து —சுற்றுலா அமைச்சர் திரு ஏ. பி. ஷர்மா, நாடெங்கும் சூதாட்ட காஸினோக்களையும், நைட் கிளப்புகளையும் நடத்தப் போவதாக அதி அற்புத அறிக்கை விடுத்திருக்கிறார். இத்தகைய மேதைகளைத் தகுதி உணர்ந்து கட்சியிலும் அமைச்சரவையிலும் வைத்துக் கொண்டிருப்பதற்காகவே இந்திரா அம்மையாரை மனம் குளிர, வாய் கொள்ளாமல் பாராட்டலாம்!

''ஜனாதிபதி ஆட்சி வேண்டுமா, நாடாளுமன்ற ஆட்சி வேண்டுமா?'' என்று விவாதம் நடத்தச் செய்து, அதன் மூலம் கொஞ்ச நாளைக்கேனும் விலைவாசி உயர்வு, வேலை இல்லாத் திண்டாட்டம் போன்ற பிரச்னைகளை மறக்கடித்தாரே, அதற்காகவே பிரதமரை வாழ்த்தலாம்!

அரசுடைமையான பாங்குகள் எப்படி கடன் வாங்கியவரைக் கசக்கிப் பிழிகின்றன என்பதை சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி திரு சத்யதேவ் தமது சமீபத்திய தீர்ப்பு ஒன்றில் எடுத்துக் காட்டியிருக்கிறார். அவர் ஒன்றை மறந்து விட்டார். கடன் வாங்குவது ரொம்பத் தப்பு என்பதை மக்களுக்கு இதை விடச் சிறந்த விதமாக எப்படி எடுத்துச் சொல்ல முடியும்? மக்களுக்குப் பாடம் போதிக்கவே அரசு உடைமையான பாங்குகள் அவ்வாறு நடந்து கொள்கின்றன! பாங்குகளிடையே போட்டா போட்டியை ஒழித்து அவற்றை அரசுடைமையாக்கி இவ்விதமெல்லாம் சிறப்பாகச் செயல்பட வழி வகுத்ததற்காக இந்திரா காந்தியை 'ஓகோ' என்று புகழலாம்.

பிரிட்டனில் அயர்லாந்துப் பிரச்னையும் தென் ஆப்பிரிக்காவில் கறுப்பர் பிரச்னையும் ஈழத்தில் தமிழர் பிரச்னையும் தீராத பிரச்னைகளாக இருப்பது போல் இந்தியாவில் இல்லையே என்று யாரும் குறைப்பட்டுக்கொள்ள இடமில்லாத வகையில் அஸ்ஸாம் பிரச்னையை நீடித்துக் கொண்டே போகிற பிரதமரின் சாமர்த்தியத்துக்கு ஒரு பேஷ், பலே எல்லாம் போடலாம்.

இப்படி எத்தனையோ காரியங்களுக்காகப் பிரதமரைப் பாராட்டலாம் என்றாலும் எல்லாவற்றையும் விடச் சிறப்பாக இப்படி ஒரு கட்டுரை எழுதி கல்கி ஆசிரியரின் பிரச்னையைத் தீர்க்க வழி வகுத்திருக்கிறாரே, அதற்காக மாதாஜிக்கு 'ஜே' போடவே செய்யலாம்!

# கல்கி ஆகஸ்டு 2



## ஆண்டுமலர் • 112 பக்கங்கள்

தமிழ் பேசும் திரைப்படத்தின் பொன் விழா ஆண்டினை யொட்டி சினிமா சிறப்பிதழ் என மலர்கிறது.

- ★ நினைவில் நிற்கும் காட்சிகள் — வாசகர் பங்கு
- ★ திரை உலகின் பிரபலஸ்தர்கள் எழுதும் கதை, கட்டுரைகள்
- ★ சினிமா நட்சத்திரங்களின் உரையாடல்கள்; பேட்டிகள்
- ★ முழு நீள நாவல்: எழுதுவது யார்? — போட்டி முடிவு
- ★ அமரர் கல்கி நினைவு சிறுகதைப் போட்டி - '81: ரூ. 1000 முதல் பரிசு பெறும் சிறுகதை
- ★ 'டணால்' தங்கவேலு பங்கேற்கும் சித்திரத்தொடர்
- ★ அரிய புகைப்படங்கள்
- ★ திருத்தலம் கண்டேன் — வாசகர்கள் எழுதும் கட்டுரைகள் ஆரம்பம்
- ★ உமாபதி: படம் பிடிக்கும் போதினிலே...

In this Country the Kings or Governor Generals not content with sucking the blood of their subjects leave to their subordinate officers full liberty to enrich themselves by all possible means.

John de Brito

## 15

கீழே சொர்ண மந்தார மரத்தடியில் பட்டுக் கறுப்பு நிறத்தில் ஒரு குதிரை! அதன் விலாவில் ஒரு 'பூ'க் குறி! அதைப் பார்த்துத் தான் சுவர்ணமுகி திடுக்கிட்டு நின்றாள்.

அந்நாளில் போர்க் குதிரைகளுக்குச் சூடு போடுவதுண்டு. பூ, இலை, சட்டி, முக்கோணம் என்று வெவ்வேறு விதச் சின்னங்களைச் சூட்டில் பொறிப்பார்கள்.

குதிரைகளைப் பராமரிப்பவர்கள் குதிரைக் கணக்கில் ஏதாவது பொய் பித்தலாட்டம் செய்துவிடக் கூடாது என்பதற்காக இந்தப் பொறிகள்.

இந்தப் 'பூ'க்குறி தேவதாசி ரத்னவள்ளியின் குதிரைகளுக்குப்போடுவது.



இங்கே ரத்னவள்ளியின் குதிரை எப்படி வந்தது?

நினைவுகள் பறந்தன.

தளவாய் நரசய்யா இப்பொழுது நினைவுக்கு வந்தார்.

அந்தப் பயங்கர இரவின் ராத்திரியில் அவர் கையில் வாளோடு அவளை மிரட்டியதை நினைத்தாள்....

இந்த ரத்னவள்ளி தளவாய் நரசய்யாவின் சீமையைச் சேர்ந்தவள்தானே!

இந்தக் குதிரைகள் கூட நரசய்யா உபயோகப்படுத்துவதுதானே!

திரும்பினாள்.

அவள் பார்வையைப் பிடித்து நிறுத்துவதுபோல் அந்தச் சேடி பெரிய புரியோடு நின்றாள்.

அவள் பார்வையும் தோற்றமும் இப்போது வித்தியாசமான அர்த்தத்தில் தெரிந்தன.

''இது யார் மாளிகை?'' என்றாள் சுவர்ணமுகி கலவரமுடன்.

''நான்தான் சொன்னேனே?''

''தேவதா எங்கே?''

''வருவார்.''

அவள் சொன்ன ஒரு வார்த்தைப் பதில்கள் கூடப் பிடிக்கவில்லை.

ஒரு பரபரப்பு கறுகறு என்று ஏற, சேடியை விலக்கி ஒரு தாவுத் தாவி, கண்ணை இமைக்கு முன் கதவின் பக்கம் நின்றாள். வந்த வேகத்தில் அதை வலுவோடு தள்ள, 'ணங்' என்று கை முஷ்டிதான் மோதியது.

கதவு மறு பக்கம் தாளிடப்பட்டிருந்தது.

ஆத்திரத்துடன் திரும்பி, ''இதை ஏன் பூட்டி யிருக்கிறார்கள்?'' என்று சாடினாள் சுவர்ணமுகி.

சேடி பேசவில்லை. உதட்டை மட்டும் கடித்து விழியால் ஒரு உருட்டு உருட்டிப் பார்த்தாள்.

சுவர்ணமுகி தாவி அவள் கைகளைத் தூக்கினாள். ''சொல்லு! இது என்ன ஊர்? என்ன இடம்?'' என்று சீறினாள்.

சேடி அதை எதிர்பார்க்கவில்லை. ஒரு அடி பின்வாங்கி, சுவர்ணமுகியைக் கலவரத்துடன் பார்த்தாள்.

சுவர்ணமுகி மேலும் அவளைப் பிடிக்கப் போக, ஒரு வேகத்துடன் எதிர்க்க ஆரம்பித்தாள்.

சுவர்ணமுகிக்கு ஆத்திரம் ஒரு பொறியாக எழுந்தது.

சேடியை விரட்டிச் சென்று அவளைக் கீழே தள்ளினாள். சேடி கத்த முயல, இடமென்று ஒரு விரிப்பை எடுத்து அவள் வாயில் திணித்தாள். பிறகு அவளது இரு கைகளையும் கால்களையும் கட்டி,

இங்குமங்கும் ஒரு விடுதலையைத் தேடி அலைந்தாள்.



ஆத்திரமும் வியர்வையும் வழிய, நெஞ்சு நகரா போல் அதிர, இங்குமங்கும் சாடித் தப்புவதற்கு வழி ஏதும் தெரியாமல்,

கடைசியில் சாளரம் ஒன்றுதான் ஒரே வழி என்று தீர்மானித்தாள்.

பெட்டகத்தைத் திறந்து, புடவைகளை அள்ளி, ஒன்றின் நுனியோடு ஒன்றாக முடிந்து, கீழே நழுவ விட்டு, மேலே உப்பரிகை விட்டத்தில் ஒரு மூலையைக் கட்டி,

கடைசியில் அந்தப் புடவையைப் பிடித்துக்கொண்டே இறங்கினாள்.

சற்று வேகமாக வழுவியதில் கீழே கால் அடிபட்டுச் சிறிது நேரம் அதிர்ந்தது.

தட்சணமே பீதியோடு எழுந்து சுற்று முற்றும் பார்த்து,

அந்த வெட்ட வெளியில் விருட்டென்று ஒரு மின்னல் பறவைபோல் பறந்து, அந்த மந்தார மரங்களின் மறைவுக்குள் நழுவ,

வேண்டாத வினையாய் அந்தப் பட்டுக் கறுப்புக் குதிரை ஹீஹ்ஹீஹ்ஹீ என்று பீர்க் காக்களுடன் கனைத்தது.

அந்தத் திடீர்ச் சத்தத்தில் அவள் நெஞ்சு பிஞ்சாக நைய,

பதறிப்போய்த் திரும்பினாள்.

நல்ல வேளை, வெட்டவெளியில் யாருமில்லை.

ஆனால் அடுத்த விநாடி, அந்த மாடி உப்பரிகைப் பக்கம் அரவம் எழுந்தது. அங்கு திடீரென்று தோதா தோன்றி, நாலா பக்கமும் வேகமுடன் பார்த்தும் பிறகு அந்தப் புடவை ஏணியைக் கண்டதும் "ஏஏஏஏய்! யார் அங்கே?" என்று ஆத்திரமாகக் கத்தினான். "ஏஏஏய்! பெண் தப்பிச்சுட்டா! பிடியுங்க பிடியுங்க!"

மாளிகையின் முகப்பு வேறு பக்கம் இருந்தது. அதிலிருந்து இரண்டு வீரர்கள் வருவதற்கு முன் சுவர்ணமுகி துள்ளி எழுந்து மரங்களின் இடைவழியே நழுவி ஓட ஆரம்பித்தாள்.

காலில் முள்ளும் கற்களும் பொத்துவிட, மேலே அங்கங்களில் கூர்மைக் கிளைகள் கிழித்துவிட,

எதையும் பொருட்படுத்தாமல், மேலெல்லாம் வெற்றிலைச் சாறு தெறித்தாற்போல் ரத்தங்கள் துளும்ப,



மூச்சை இறைத்தவாறு ஒரே வெறியாக ஓடினாள் அவள்.

போகப் போக மரங்கள் நெருங்கி ஒரு அரண்யம் போல் இருட்டுடன் எதிர்கொள்ள, இளைப்புத் தாங்காமல் கால்கள் தடுமாறி ஒரு புதரின் பக்கம் மல்லாந்து விழுந்தாள்.

அதே நேரம் தோதாவும் ஆட்களும் அந்த மர அடர்த்தியுள் பரவலாக நுழைந்து கொண்டிருந்தார்கள்.

**ஸா**ந்தோமேக்குள் கோபமாக நுழைந்தான் அர்ச்சன தேவன்.

அவனோடு ஒரு பரிவாரம் சேர்ந்திருந்தது. பாதி அவன் அமர்த்தியது. மீதிப் பாதி பகபுலேட்டி ரங்காஜம்மா முதலியோர் உவந்தளித்தது.

போதாததற்கு மயிலாப்பூர் கொத்தவாலிடமிருந்து முப்பது வீரர்களை இரவல் வாங்கிக் கொண்டான்.

நாட்டில் நடக்கும் சிங்காதனச் சண்டையில் யார் யாருடைய கட்சி என்று தெரியாது. தனது தளவாய் முத்திரையைக் காண்பித்து கொத்தவால் நாயக்கரிடமிருந்து அந்த வீரர்களை இரவல் வாங்கிக் கொண்டான் அர்ச்சனன்.

காலையில் கோபாவேசமாக ஸாந்தோமேயில் நுழைந்தான்.

சாலையில் கடுகிப் போய் அவனை அழைத்து ஏமாற்றிய அந்த வீட்டை இலக்காக அடைந்தான்.

அதன் வாசலில் நின்றதும், ''ஏ பரங்கிச் சிறுக்கிகளே!'' என்று கர்ஜனை புரிந்தான் அவன்.

இரண்டு அண்டை வீட்டு வாயில்களும் திறந்து, வெளியே கோபாவேசமான இந்தியப் படை நிற்பதைப் பார்த்ததும் திறந்த அவசரத்திலேயே அடைத்துக் கொண்டன.

அர்ச்சனன் தலையை ஆட்ட, ஒரு வில்லாளி சீறிக்கொண்டு அம்பை எய்து அந்த வீட்டின் மரக் கதவை ஓசையோடு கீற வைத்தான்.

லோ லோ லோ என்று போர்த்துக்கிசிய பிரலாபங்கள்.

எதிர் வாசல்களில் சில வெள்ளைக்காரர்கள் வெளிவர, அவர்களைப் பயமுறுத்தும் வகையில் அம்பு தலை மேலாகச் சீறியது.

வீட்டுக்குள்ளிருந்து இதற்குள் குரல் போர்த்துகீசிய மொழியில் ''ஐயா, ஐயா! எதுவும் செய்யாதீர்கள். கதவைத் திறக்கிறோம்! என்ன வேண்டும் சொல்லுங்கள்!'' என்றது.

அந்நாளில் தென்னாட்டின் கிழக்குக் கடற்கரை முழுதும் போர்த்துகீசிய மொழியை எளிய ஜனங்கள் கூட அறிந்திருந்தார்கள். பேசுவதற்கும் அறிந்திருந்தார்கள்.

வில்லாளி உடனே, ''கதவைத் திறவுங்கள்! வெளியே வாருங்கள்!'' என்று போர்த்துக்கிசிய மொழியில் இரைந்தான்.

கதவு திறந்தது.

லுல்லுல்லுல்லோ என்று ஐரோப்பியப் பெண்கள் சின்னதும் பெரிசுமாய் வெளியே பயந்து கொண்டே வந்தார்கள்.

## ஒரு கேள்வி, ஒரு பதில்!



**கேள்வி:** சதாசிவம் கமிஷனை எதிர்த்து இளைஞர் (இ) காங்கிரஸ் நடத்தும் போராட்டம் ''முட்டாள் தனமானது'' என்று தமிழ் நாடு (இ) காங்கிரஸ் கட்சியின் தலைவர் திரு எம். பி. சுப்பிரமணியம் கூறியுள்ளாரே?

**இளைஞர் (இ) காங்கிரஸ் தலைவர் திரு தங்கபாலு பதில்:**

மத்திய அரசு விசாரணைக் கமிஷன் அமைத்தவுடன் சதாசிவம் கமிஷன் கலைக்கப்படவேண்டும் என்று முதன் முதலில் கூறியவரே திரு எம். பி. சுப்பிரமணியம்தான். எம். ஜி. ஆரோ சதாசிவம் கமிஷன் தொடர்ந்து நீடிக்கும் என்று கூறியிருக்கிறார். சட்டப்படி சதாசிவம் கமிஷன் தனது விசாரணையைத் தொடர முடியாது என்பது எங்களது வாதம். மத்திய உள்துறை இணை அமைச்சர் மக்வானா கூட, கமிஷனைக் கலைத்து விடவேண்டும் என்று கூறியிருக்கிறார். சதாசிவம் கமிஷன் கருணாநிதி ஆட்சியில் இருந்த போது எரிசாராயத்தில் நடந்ததாகக் கருதப்படும் ஊழல்களையும் விசாரிக்கும் என்று கூறப்படுகிறது. இதை நான் வரவேற்றாலும் கருணாநிதி மேல் இந்தக் கமிஷனை எம். ஜி. ஆர். முன்பே அமைத்திருக்கலாமே! தம்மீது புகார் வந்ததும், தமது பெயர் கெட்டாலும் பரவாயில்லை, கருணாநிதியின் பெயரும் சேர்ந்து கெட வேண்டும் என்ற ரீதியில் செயல்பட்டிருக்கிறார் எம். ஜி. ஆர். ஆனால் இரண்டு பேருமே விசாரிக்கப்பட வேண்டியவர்கள்தான்.

தமிழக இளைஞர் (இ) காங்கிரஸ், சதாசிவம் கமிஷனை எதிர்த்து நடத்தும் போராட்டத்துக்கு அகில இந்திய (இ) காங்கிரஸின் பொதுச் செயலாளர் திரு சத்திய நாராயண ராவ் தமது அங்கீகாரத்தைத் தெரிவித்து இருக்கிறார். மத்தியில் கட்சிப் பொறுப்பிலுள்ளவர்களின் சம்மதத்தின் பேரில்தான் இந்தப் போராட்டம் நடைபெறுகிறது. இதில் குற்றம் கண்டு பழித்துக் கூறுபவர்கள் (இ) காங்கிரஸ் கட்சியின் மத்திய தலைமையை எதிர்த்தே செயல்படுகிறார்கள்.

பேட்டி: ப்ரியன்

# போராட்டத்தை எதிர்ப்பவர்கள், தலைமையை எதிர்ப்பவர்களே!

# குமாரி இந்திராணி



அளிப்பது : ப்ளஸ் டூ மாணவி போன்ற தோற்றம்.
படித்தது : எம். பி. பி. எஸ். இறுதி ஆண்டு.
பிடித்தது : உலர்ந்த மலர்களைப் பாங்குற ஒட்டி, மகரந்தத் துகள் தூவி, வாழ்த்து அட்டைகள் தயாரித்து அனுப்புவது.
கிடைத்தது : நடனத்தில் பயிற்சியும் தேர்ச்சியும்.
உடைத்தது : ஆறடி மேடையிலிருந்து விழுந்து தம் காலை! (இப்போது சிராகிவிட்டது.)
ரசித்தது : நடனம் சம்பந்தப்பட்ட நூல்களை
அடித்தது : இவ்விதழ் கல்வி மேலட்டையை அலங்கரிக்கும் அதிர்ஷ்டம்.

பேட்டி: சிக்கி
வண்ணப்படம்: எம்.கே. ராமமூர்த்தி

---

தெருவை அடைந்ததும் அவர்கள் பரந்த கவுன்கள் குடைகளாகப் பறந்தன.

வெளிறிய முகங்களுடன் அர்ச்சுனனைப் பார்த்துக் கை கூப்பினார்கள். இரண்டு சின்ன வயசுகள் கீழே மண்டியிட்டார்கள்.

''ஐயாவை ஏமாத்தினீங்களா?'' என்றான் வில்காரன்.

''ஆமாங்கோ!'' என்றாள் ஒரு இளவயதுப் பெண்.

''எவ்வளவு பணம் பறிச்சே? எவ்வளவு பொன் எடுத்தே?''

''அல்லாத்தையும்கொடுத்துடறோங்கோ!''

தலைவி போன்றவள் தலையசைக்க இரண்டு பேர் உள்ளே ஓடிச் சிறிது நேரத்தில் ஒரு கனமான பையோடு வெளியே வந்தார்கள்.

அர்ச்சுனன் பல்லைக் கடித்தவாறு கீழே இறங்கினான். அவன் கால் இப்போது வலுப் பெற்றிருந்தது.

''இந்தாப்பா! உள்ளே போய் யாராவது சோதனை போடுங்க!'' என்றான்.

''ஐயோ வேண்டாம்! ஐயோ வேண்டாம்!'' என்று தலைவி புலம்பலாகக் கூற, ''ம். பேசாதே!'' என்று அடக்கினான் வில்லாளி.

உள்ளே இருவர் சென்று வெகு நேரம் வரை திரும்பி வரவில்லை.

பிறகு பல ஓசைகள் எழும்ப, ஏழு மெலிந்து போன இந்தியப் பெண்கள் முன்னாலும் அவர்கள் பின்னாலுமாக வந்தார்கள்.

''சுவாமி! இவர்களைச் சிறை வைத்திருந்தார்கள் உள்ளே!''என்று இருவரும் சொல்ல, வில்லாளி கையில் கோல் எடுத்து போர்த் துக்கீசிய பெண்கள் முன்பாக ஒரு ஓட்டம் காட்ட, ''ஐயோ! ஐயோ!'' என்று அலறினார்கள் அவர்கள்.

இந்தியப் பெண்கள் தாங்கள் விலைக்கு வாங்கப்பட்டவர்கள் என்றும் தங்களை அடிமையாய் உள்ளே சிறை வைத்திருக்கிறார்கள் என்றும், பணக்கார வெள்ளையருக்குத் தங்களை ஆசை நாயகிகளாக அனுப்புகிறார்கள் என்றும் புலம்பலாகத் தெரிவித்தார்கள்.

''விஜயநகர சாம்ராஜ்யத்தில் இருந்து கொண்டே இந்த அநியாயம் செய்கிறீர்களா'' என்று அர்ச்சுனன் கர்ஜனையோடு கேட்டு, ''எடு அபராதம்! நூறு பவுன் நாணயங்கள் கொடுங்கள்!'' என்று கட்டளை இட்டான்.

அது அதிகமான தொகை என்று அவர்கள் கூற, வில்லாளி மேலும் அவர்களை மிரட்ட, கடைசியில் ஒரு வழியாய் பாதி பவுன் நாணயங்களாகவும், பாதி வராகன்களாகவும் கொடுத்து அபராதத்தைச் செலுத்தினார்கள்.

அர்ச்சுனன் அவர்களை எச்சரித்துவிட்டு, அந்த இந்தியப் பெண்களோடு புறப்பட்டான்.

வீதி வழியே சென்று ஒரு விசாலத் தோட்டத்தை அடைந்ததும், அர்ச்சுனன் பரிவாரங்களுடன் நின்று, அந்தத் திறமையான வில்லாளியை நோக்கி, ''உம் பேர் என்னப்பா?'' என்றான்.

விநயத்துடன் வந்த வில்லாளி, ''வீரமாலி'' என்றான்.

''நல்லது வீரமாலி! இவ்வளவு துல்லிய வீச்சில் அம்பு விட்டவரை நான் பார்த்ததில்லை'' என்று அர்ச்சுனன் புகழ,

''ஐயா! அவர் வில்லில் இன்னும் எத்தனையோ வேலை செய்து காட்டுவார்! எல்லாம் வித்தைகளாகக் கூட இருக்கும்'' என்றான் ஒருவன்.

''வீரமாலி! நான் ஒரு பெண்ணைத் தேடி வந்திருக்கிறேன். அவளைக்கப்பலில் ஏற்றி இரா விட்டான் அவன் இந்த நகரத்துக்குள்தான் இருக்க வேண்டும். அவளைக் கண்டு பிடித்தாக வேண்டும். அவளைக் கப்பலில் கொண்டு போனார்கள் என்றால், நாம் உடனே நாகப்பட்டினம் ஓட வேண்டும். அங்கே மரக்கலம் அமர்த்தி அந்தக் கப்பலைப் பிடிக்க வேண்டும்'' என்றான் அர்ச்சுனன்.

''ஐயா! அந்தப் பெண் யார்?'' என்றான் வீரமாலி.

''ஒரு பிரதானியின் குடும்பத்தைச் சேர்ந்தவள். அவள். பெயர் சுவர்ணமுகி!'' என்றான் அர்ச்சுனன்.

"கவர்ணமுகி!" என்று ஒரு கீச்சுக் குரல் கேட்டது.

அர்ச்சுனன் திரும்ப, அடிமைப் பெண் ஒருத்தி எழுந்து நின்றாள்.

"ஐயா! கவர்ணமுகி என்ற பெண் நாகலாபுரத்திலிருந்து என்னோடு வந்தாள். அவள் தான்!"

அந்தப் பேச்சைக் கேட்ட பரபரப்பில் அர்ச்சுனன் அவளை நோக்கிக் காலை இழுத்து ஓடினான். "ஆமாம்மா! அவள்தான்! அவளேதான்! நீ பார்த்தாயா? எங்கே போனாள்? என்ன ஆனாள்?" என்று ஆத்திரமுடன் கேட்டான்.

"ஒரு ஒலாந்தியன்தான் என்னைப் பிடித்துக்கொண்டு வந்தான். இங்கே கடற்கரையில் எங்களில் பலரை விற்பனை செய்தான். கவர்ணமுகியை யாரோ ஆங்கிலேயன் வாங்கிக்கொண்டு சென்றான்."

"யார் அவன்?"

"தெரியாது. என்னை இந்தப் போர்த்துக்கீசிய வியாபாரி வாங்கினார்கள். வாங்கியதிலிருந்து எங்களுக்கு அழகு செய்ய, நடை நடக்க, போர்ச்சுகீஸ் பேச, ஆட்டம் ஆட, முதலிய சிருங்கார வாழ்க்கைக்கான எல்லா வழிகளிலும் பயிற்சி தந்து கொண்டிருக்கிறார்கள். பின்னால் என்னை வெள்ளைக்கார நாட்டின் உல்லாச மாளிகைகளுக்கு விற்பனை செய்வார்களாம்" என்றாள்.

"அநியாயம் அநியாயம்! இந்த நாட்டு மண்ணிலா இது போன்ற வியாபாரங்கள் நடக்கின்றன! இந்தப் போர்த்துக்கீசியர்களை அழித்து ஒழித்து விட்டு...." நறநற வென்று பற்களைக் கடிப்பதோடு பேச்சை நிறுத்தினான் அர்ச்சுனன்.

வீரமாலி மெதுவாக அவனிடம் வந்து "ஐயா, இங்குள்ள போர்த்துக்கீசியக் குடும்பங்கள் எல்லாவற்றிலும் இந்திய அடிமைகள் இருப்பார்கள். எல்லோரையும் விடுதலை செய்ய விரும்புகிறீர்களா? அல்லது கவர்ணமுகியை மட்டும் தேட விரும்புகிறீர்களா?" என்றான்.

அர்ச்சுனன் கண்கள் மெள்ள நிதானமாயின. தானே அடங்குபவன் போல், "கவர்ணமுகியைத் தேடினால் மட்டும் இப்போது போதும். அதுதான் நம் நாட்டிற்கு மிக முக்கியம்" என்று கூறினான்.

"அப்படியானால் அந்தக் கேளிக்கை மாளிகைக்குப் போக வேண்டும். அங்கே ஒரு இரவில் நமக்கு வேண்டிய விஷயத்தைக் கிரகித்துவிடலாம்" என்றான் வீரமாலி.

"புறப்படு!" என்றான் அர்ச்சுனன்.

"இப்போதல்ல! இரவு! இப்போது நம் பரிவாரங்களை உடனே இந்த நகருக்கு வெளியில் கொண்டு போய் மயிலாப்பூரில் விட்டு விடுவோம். இங்கிருந்தால் ஆபத்து! சிறிது முன்னால் நமக்கு இசைவாக இருந்த குருட்டு அதிர்ஷ்டம் எப்போதும் நம்முடன் இருக்கும் என்று சொல்ல முடியாது."

இரவில் கேளிக்கை மாளிகைக்குப் போனார்கள். உள்ளே பாட்டும், கூத்தும் சூதாட்டமும் வலுத்திருந்தன.

வெவ்வேறு மேஜைகளில் வெவ்வேறு கும்பல்கள் சூதாட.

ஒரு மேஜை முன்னால் அர்ச்சுனனும் வீரமாலியும் அமர்ந்தார்கள்.

சற்று அப்பாலிருந்த மேடையில் ஐரோப்பிய சங்கீதத்துக்கு ஆடிக் கொண்டிருந்த ஒரு வெள்ளைப் பெண் அவர்கள் இருவரையும் உடனே தெரிந்து கொண்டாள்.

காலையில் அர்ச்சுனன் ஆளையாடிய போர்த்துக்கீசிய வீட்டைச் சேர்ந்த இளம் பெண் அவள்.

அவள் இரண்டு இடங்களுக்கு வெள்ளைக்காரர்கள் காதுகளில் குசுகுசுத்துப் பேசினாள். வெள்ளைக்காரர்கள் தங்கள் குறுங்கத்திகளை எடுத்து இடுப்பில் செருகிக் கொண்டு அர்ச்சுனன், வீரமாலி இருக்கும் மேஜையை நோக்கி வந்தார்கள்.

இருவரும் அந்த இருவர்களின் மேல் பாய்ந்து நின்றார்கள். அவர்கள் கைகள் இடுப்பு வாளினை மெள்ள தடவின.

(தொடரும்)

# ரே கமிஷன் அல்ல, ராய் கமிஷன்!



ரே கமிஷன் அல்ல; ராய் கமிஷன் என்றுதான் உச்சரிக்க வேண்டும்.

ராயுடைய தகப்பனார் சுதந்திர பாரதத்தில் ஒரிஸ்ஸா மாநிலத்தில் உயர்நீதி மன்றத்தின் முதல் பிரதம நீதிபதியாக விளங்கியவர். பிரதம நீதிபதியின் மகன் சுதந்தர் ஜோதி ராயும் பிரதம நீதிபதியாகவே உயர்ந்து புகழ் பெற்றார். நேர்மையானவர் என்று பெயர் வாங்கினார்.

இவர் பதவி ஏற்றபோது, "ஒரிஸ்ஸா லா ரிப்போர்ட்" என்ற பெயர் தாங்கிய நீதி மன்றத்தின் அதிகாரபூர்வமான பத்திரிகை, "வழக்கில் சம்பந்தப்பட்டவர் யார் என்று பாராமல் நியாயத்தை மட்டுமே வழங்குவார்" என்று இவரைப் பாராட்டியது.

—தகவல் : தம்பி சீனிவாசன்




# கவி உருவம்

மனித உருவங்களைப் போலவே கவிதைக்கும் உருவங்கள் உண்டு. எப்படி முகத்துக்கு முகம் அடையாளம் வேறுபடுகிறதோ அப்படியே கவிதைக்குக் கவிதை உருவ வேறுபாடு இருக்கிறது! மூக்கு, கண், காது எல்லாம் அதுஅது இருக்க வேண்டிய இடத்திலே எல்லா முகங்களுக்கும் இருந்தபோதிலும் அடையாளம் வேறுபடுகிறதல்லவா? அது போலவே ஒரே பாவினத்துக்குள்ளும் கூவிளம், கருவிளம், புளிமா, தேமா என்று அந்தந்த இடத்தில் எல்லாச் சீர்களும்இலக்கணப்படியே பொருந்தி இருந்தாலும், பாடலுக்குப் பாடல் ஒரு வேறுபாடு இருக்கிறது. இந்த வேறுபாடுகளைக் கண்டுகொள்வதும், அவற்றில் இதயம் ஈடுபடுவதுமே நுட்பமான இலக்கிய அனுபவமாகும்!

மனித உருவங்களைக் கண்ணினால் கண்டு தெளிகிறோம். கவி உருவங்களையோ எழுத்திலேபார்ப்பதோடு,காதினால் பார்க்கவேண்டியிருக்கிறது. காதுக்குள்ளே ஒரு ஒலிக்கண் வேண்டும்! அந்த ஒலிக்கண் உணர்வு நிலையிலே இமைகளைத் திறக்கக் கூடியது. அந்தக் கண் எவ்வளவுக்கு எவ்வளவு கூர்மை பெறுகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு நுட்ப காவிய தரிசனம் முழுமை பெறுகிறது. தொல்காப்பியர்,

''கண்ணினும் செவியினும்
திண்ணிதின் உணரும்
உணர்வு!''

என்று சூத்திரம் சொல்கிறார். இந்த உணர்வு எல்லாருக்கும் எளிதில் அமைகிறதில்லை. இந்தத் 'திண்ணிதின் உணரும் உணர்வு'தான் ரசிகமணியின் அரிய கவி உணர்வு! இந்த உணர்வு நிலையிலே நின்றுதான் அவர் கவி உருவங்களைத் தாமும் கண்டு, பிறரும் காணும் படியாகக் காட்டி வந்தார்.

தமிழ் மொழியில் உள்ள கவி உருவங்களுக்கு ஒப்பாக வேறு எந்த மொழியிலும் இல்லை என்று ரசிகமணி அடிக்கடி அழுத்தமாகச் சொல்லுவார். மொழி வெறியர்கள் சொல்லுகிற பேச்சோடு இதையும் சேர்த்துத் தள்ளிவிடக் கூடாது. தமிழைப் போலவே, ஆங்கிலக் கவிதைகளையும் ஆழ்ந்து கற்றவர் டி.கே.சி. உருவம் சிதறாமல் அவர் சில தமிழ்க் கவிகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். அந்த மொழிபெயர்ப்பைப் பார்த்தால்தான் அவருடைய ஆங்கிலப் புலமை எத்தகையது என்பது புரியும். இத்தனை புலமையோடு ஆங்கிலத்திலே தோய்ந்தவர், தமிழ்க் கவிதையின் உருவச் சிறப்பு நிகரற்று விளங்குகிறது என்று எப்படிச் சொன்னார்? வெறியில் சொல்லவில்லை. பல ஆண்டுகள் ஆராய்ந்து, ஒப்பிட்டுப் பார்த்து, ஒலி நுட்பங்களைச் சீர்தூக்கித் தேர்ந்து இந்த முடிவுக்கு வந்தார்.

வெண்பா என்றும், விருத்தம் என்றும், அகவல் என்றும் உள்ள பாவினங்களின் ஒலி உருவங்களை மிகவும் அனுபவிப்பார் டி.கே.சி. கட்டளைக் கலித்துறை என்ற வடிவ அமைப்பைப் பற்றி மிக மிக உயர்வாக வியந்து பேசுவார். வெண்பாவின் தனிச் சீரும், கடைசிச் சீரும் பற்றி, அந்த அழகைப் பாடிப் பாடி விளக்கிக் காட்டுவார்.

இதோ அவரே பேசுகிறார்:

''ஆங்கில ஆசிரியர் ஒருவரைச் சமீபத்தில் கவியைப் பற்றிப் பேசும்படியாக (ஆசிரியர் கெராட்) அமெரிக்கர் அழைத்தார்கள். அவரும் அமெரிக்காவுக்குப் போனார். பிரசங்கத்தை ஆரம்பித்தார்.

'உலகத்தில் கவியை ஏன் எழுதுகிறார்கள் என்று கேள்வி கேட்கலாம். அதற்குப் பதில் இதுதான்: வசனம் என்பது அவ்வளவு இலேசான காரியம்!' என்றார்.

இதிலிருந்து கவி எவ்வளவோ ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியது என்று தெரிகிறதல்லவா!

ஆங்கிலக் கவிதையின் அமைப்பு ஒரு விதமாகத்தான் இருக்கும். அதைப் பற்றியே இவ்வளவு பாராட்டிப் பேசுகிறார் ஆசிரியர்.

தமிழ்க் கவியோ, இதர பாஷைக் கவிகள் எதோடும் சேராதபடி, தனித்த முறையில் இருக்கிறது. டாக்டர் வின்ஸ்லோ தொகுத்த தமிழ் அகராதியின் முகவுரையில் அவர் சொல்கிறார்:

'ஒரு காரியம் நான் சொல்ல வேண்டும். அது வெறும் படாடோப வின்னியாசம் அல்ல. அதாவது கவி உருவத்தின் நுன்னிபத்தை நயம் பதனிட்ட நயத்தையும் பார்த்தால், தமிழ் பாஷை கிரேக்க பாஷையை விட நிச்சயமாய் மேலானதுதான்!'

இது டாக்டர் வின்ஸ்லோவின் வார்த்தைகள். நமக்குத் தெரிந்த மட்டில் மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய தமிழைச் சேர்ந்த பாஷைகளில் மட்டுமே கவிகள் தமிழ்ப் பாவினங்களை ஒட்டி இருக்கின்றன. அவைகளும் சமீப காலத்தில் உண்டானவையே.

தமிழ்க் கவிக்கு உரிய அங்கங்கள், முக்கியமாகச் சீர் என்றும், மோனை என்றும், எதுகை என்றும் உண்டு.

இவைகளை யெல்லாம் கவிக்கு அலங்காரம் என்று கருதலாகாது. உண்மையில் அவை அலங்காரங்கள் அல்ல; அங்கங்களே!

அபிநயக் கலையில் கண்ணும் இதழும், கையும் காலும் எப்படி அங்கமாயிருந்து, உணர்ச்சிகளை எடுத்துக் காட்டுகின்றனவோ, அப்படியே, கவியிலுள்ள சீர், மோனை, எதுகை ஆகிய எல்லாம் அங்கங்களாக இருந்து உணர்ச்சிகளை எடுத்துக் காட்டுகின்றன.

தமிழ்க் கவி என்றால் இப்படி உணர்ச்சிகளை எடுத்துக் காட்ட வேண்டும். அப்படி உணர்ச்சிகளைக் காட்டாதபடி ஏதோ அலங்காரத்துக்காக எதுகை, மோனை, சீர்களை உபயோகப் படுத்தினால் அது கவி அல்ல; அதனிடத்தில் உணர்ச்சியையோ உண்மையையோ காண முடியாது. பாவமில்லை, ரசமில்லை என்று சொல்லிவிட நேரும். ஏதோ சொல்லை வைத்து விளையாடிய வெறும் செய்யுளாகத் தான் இருக்கும். அவைகளை அனுபவிக்க முடியாது. அவைகளை வாசிப்பதெல்லாம் ஆயாசம்தான். தொந்தரவுதான்!

ஆயிரக் கணக்கான வருஷமாகவே மேலே சொன்ன கவிப் பண்புகளை நம்மவர்கள் ஆராய்ந்து அறிந்து அனுபவித்திருக்கிறார்கள் பாடியுமிருக்கிறார்கள்.

நந்திக் கலம்பகம் பாடிய ஆசிரியர்,
'தொல்லை நூல் வரம்பு
முழுது கண்டான் நந்தி'

என்று நந்தி வர்மனைப் பற்றி (கி.பி. ஒன்பதாவது நூற்றாண்டில்) சொல்லும்போது நந்திவர்மனோடு ஆசிரியரும் உண்மையான தமிழ்ப் பண்பு வாய்ந்த தொன்மை நூல்களை (தொல்லை நூல்) எவ்வளவாகக் கற்றார், களைத்தார், கையாண்டார் என்பது நன்றாய் விளங்குகிறது.

கம்பருடைய கவிகளுக்குத் தனியாக ஒரு கலையன்றி. செய்யுளினங்கள் பூர்வமானவைதான். ஆனால் இதய பாவத்தை உட்கொண்ட செய்யுள்கள் அடியெடுத்து வைக்கும்போது தனியான கதி நயங்களைக் காண்கிறோம்.

இப்படித் தனித்த ரசம் வாய்ந்த உயிர்த் தத்துவம் வாய்ந்த கவிகளாய் இருப்பதாலேயே கம்பருடைய கவிகளை (உருவத்தை) இனம் கண்டுகொள்ள முடிகிறது!

தமிழ்ப் பாடல்கள் எல்லாம் நடனத்துக்கும் தாளத்துக்கும் இசைக்குமாக ஆதியில் ஆக்கப்பட்டன. அடி என்கிற வார்த்தையானது, நடனத்திலிருந்தே செய்யுள் பிறந்தது என்பதைக் காட்டும் சீர் என்பது தாளத்தைக் காட்டும். ஆகவே நடனமும் தாளமும் எந்தத் தமிழ்ச் செய்யுளுக்கும் பின்னும் இருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுவது அவசியம்!''

## "பிலிம் ரிப்பேரர்"



''அந்தக் காலத்தில் ஏதேனும் ஒருபடம் நன்றாக ஓடவில்லை என்றால் படம் ஓடுவதற்கு ஒரு வழி வைத்திருந்தார்கள். கலைவாணர் என். எஸ். கே. அவர்களிடம் சொல்லி அவரது நகைச்சுவைக் காட்சிகளைப் பிரத்தியேகமாய் எடுத்துப் படத்திலே சேர்ப்பார்கள். படம் அப்புறம் பிரமாதமாய் ஓடும்.

''இப்படி ஓடாத படங்களை யெல்லாம் ரிப்பேர் செய்து ஓடச்செய்ததால் அன்றைக்குக் கலைவாணரை எல்லாரும் ''பிலிம் ரிப்பேரர்'' என்று கூப்பிடுவார்கள்.''

- பரீக்ஷா நாடகக் கருத்தரங்கில்
கலைஞர் எஸ். வி. சகஸ்ரநாமம்
- தகவல்: 'மு'

# "காம்ப்ளான் ஒண்ணுதான் சரி என் குடும்பத்துக்கு ...திட்டமிட்ட பரிபூரண உணவு."



"பல வேளைகள் சாப்பிடத் தவறி விடும் என் கணவருக்கு"



"சாப்பிடும்போது சண்டித்தனம் செய்யும் என் மகனுக்கு"



"நோயுடல் தேறிவரும் என் தாயாருக்கு"

## காம்ப்ளான்® ஒன்றுதான் எவருக்கும் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால் முழுமை பெற்றது.

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்போ-ஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்-பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை: இன்சுவை ரகங்களாக — சாக்கலேட் காம்ப்ளான், ஏலக்காய்-குங்குமப்பூ காம்ப்ளான், ஸ்ட்ராபெர்ரி காம்ப்ளான், தவிர சாதா காம்ப்ளான்.






"அசதியினால் சரிவர சாப்பிட முடியாத எனக்கு"

## திட்டமிட்ட பரிபூரண உணவு

# காம்ப்ளான்®

லின்டாஸ்-GLC. 10-2015 TM

சாந்தி அவசரம் அவசரமாகப் பரோட்டாவை மடித்துச் சின்ன டிபன் டப்பாவில் வைத்தாள். சமையலறை மேடை மேல் இருந்த கடிகாரம் ஏழரையை நெருங்கிக் கொண்டிருந்தது. இன்னும் அரை மணி நேரத்தில் கிளம்பியாக வேண்டும். எட்டு மணி பஸ்ஸைப் பிடித்தால்தான் ஆஸ்பத்திரிக்கு ஒன்பது மணிக்குப் போய்ச் சேர முடியும். ஒன்பது அடித்து அரை விநாடி ஆகிவிட்டாலும் ஹெட்நர்ஸ் காச்மூச்சென்று ஆங்கிலவாடை வீசும் இந்தியில் கத்துவாள்.

வீட்டில் இருந்த நிசப்தத்தில் கடிகாரத்தின் ஓசை அதிகமாகக் கேட்டது. அவள் படுக்கை அறைக்குள் எட்டிப் பார்த்தாள். நடராஜன் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தான். கையும் காலும் கண்ட திசையை நோக்கியபடி படுத்திருந்த அந்த உருவத்தைப் பார்க்கையில் மனத்தின் மூலையில் ஒரு சின்ன, மிகச் சின்ன அருவெறுப்புத் தோன்றி மறைந்தது. நேற்றைய இரவின் நினைவு வந்தது. அந்தக் கத்தலும் அந்த வார்த்தைகளும் மறுபடி நினைவுக்குள் புகுந்து ஒரு ரௌத்திரத்துடன் விசுவரூபம் எடுத்தது.

அவள் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு பரபரவென்று காஸ் அடுப்பைத் துடைத்து மேடையைத் துடைத்துஅவனுக்காகச்செய்த சமையலை ஓரமாக மூடி வைத்தாள். காப்பி டிகாக்ஷன், பால், சர்க்கரை தயாராக இடதுபுறம் ஒரு டிரேயில். அதன் பக்கத்தில் அவன் எடுத்துக் கொண்டு போக வேண்டிய டிபன் பாக்ஸ்.

சமையல் அறை ஜன்னல் வழியே வெளியே பார்வையை ஓட்டியபடி அவள்





# அந்தி நேரத்து உதயங்கள்

## வாஸந்தி

தனது காலை உணவைச் சாப்பிட ஆரம்பித்தாள். ஒன்பதாவது மாடியிலிருந்த அவளது ஜன்னலிலிருந்து கீழே பார்க்கையில் டில்லி ஜனங்களின் தலை போகிற அவசரம் தெரிந்தது. டில்லி எத்தனை மாறி விட்டது? எத்தனை ஜனங்கள்! எத்தனை நெரிசல்! பஸ்களுக்கு எத்தனை வேகம்! பிரயாணிகள் முழுசாக இறங்குவதற்குள் பறக்கும் பஸ்கள்! பொறுமையே இல்லாத டிரைவர்கள். உயிருக்கு மதிப்பே இல்லாமல் போய்விட்டது இப்போது.... இல்லாவிட்டால் அத்தனை விபத்துக் கேஸ்கள் தினமும் ஆஸ்பத்திரிக்கு வந்து சேராது. திடீரென்று பயங்கரச் சத்தத்துடன் ஒரு விமானம் அவளது ஜன்னலுக்கு நேர் மேலாகப் பறந்து சென்றது. எல்லாரும் எதற்காக இப்படி ஓடுகிறார்கள்? பறக்கிறார்கள்? எதைச் சாதிக்க ஓடுகிறார்கள்—உயிருக்கு மதிப்பளிக்காத ஓட்டம் எதைச் சாதிக்க முடியும்?

சென்ற ஜூன் மாதம் 23ம் தேதி அவளுக்கு நினைவு வந்தது. இப்படித்தான் ஓர் அசுரத்தன வேகத்தோடு வெறியோடு நான்கைந்து நாட்கள் ஒரு விமானம் மேலே சுழன்று பார்ப்பவர்கள் வயிற்றையெல்லாம் கலக்கி ஐந்தாம் நாள் மேலே எழும்பிய சுருக்கிலேயே விழுந்து பஸ்பமாகியது. மிகுந்த பரபரப்போடு சிதறிப்போன அந்த உடலை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்து அதை ஒரு மனித உருவமாக வெளிப்பேருக்குக் காண்பிக்க டாக்டர்களும் நர்ஸ்களும் செய்த தையல் வேலை இன்னும் நினைவில் பசுமையாக நின்றது.

ஆளப் பிறந்தவன் என்று எத்தனை பேர்கள் ஜோஸ்யம் சொல்லியிருந்தார்கள்! அவனே அந்த எதிர்பார்ப்பையும் நம்பிக்கையையும் அவை விளைவித்த கோட்டைகளையும் மேலே பறக்கையில் சுமந்திருக்க வேண்டும். அந்தக் கனம் தாங்காமல் கீழே விழுந்திருக்க வேண்டும். என்னுடைய முன்னேற்றத்துக்கு எந்தச் சக்தியும் குறுக்கே நிற்க முடியாது என்கிற ஆணவத்தின் கனம்....

மறுபடியும் விமானம் பயங்கர சத்தத்துடன் குனிந்து எழும்பிப் போயிற்று. அவள் தன் நினைவை உதப்பிக் கொண்டு கை கழுவினாள். மனசுக்கு இரண்டு நிமிஷ நேரம் கிடைத்தால் எத்தனை தொலைவுக்குப் போய் விடுகிறது! அவள் அவசரமாகத் தன்னைத் தயார் செய்து கொண்டாள். நடராஜன் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தான்.

''இவர் எழுந்திருந்தால்தான் ஆபத்து'' என்று அவள் தனக்குள் சொல்லிக் கொண்டாள். ஏதாவது வாக்கு வாதம் ஆரம்பித்து அவள் அதற்குப் பதில் சொல்ல நேர்ந்தால் இன்றைக்கு ஆஸ்

பத்திரிக்குப் போய்ச் சேர முடியாது. ''பெரிய ஆபீஸர் உத்தியோகம் பார்க்கிறியோ? ஒரு நாளைக்கு லேட்டாப் போனா என்ன ஆயிடும்?''

'சம்பாதிக்கிற திமிரு உனக்கு! அதான் புருஷன் என்கிற மதிப்பு இல்லே!'

அவள் டிபன்பாக்ஸைக் கைப் பையில் திணித்துக் கொண்டு தனக்குள் மெல்லப் புன்னகைத்தபடி ஓசைப்படுத்தாமல் கதவைத் திறந்து வெளியே வந்தாள். கதவைச் சாத்திவிட்டு லிஃப்டுக்குக் காத்திருக்கையில் பக்கத்து ஃப்ளாட் ரமாவும் ரமேஷ் சோப்ராவும் ஆபீஸுக்குக் கிளம்ப அவளுடன் சேர்ந்து நின்றார்கள்.

''ஹலோ!''

''ஹலோ!''

லிஃப்ட் திறந்தது.

'ஜீ'யை அமுக்கியபடி ரமேஷ் கேட்டான்:

''நடராஜன் இன்னும் கிளம்பவில்லையா?''

''இன்னும் அவர் எழுந்திருக்கக் கூட இல்லை''

''லக்கி கை!''

சாந்தி ரமாவைப் பார்த்துப் புன்னகைத்தாள்.

''ரொம்ப அதிர்ஷ்டக்காரன்!'' என்றான் ரமேஷ் மறுபடி.

''எதற்கு இரண்டு தடவை?'' என்று ரமா சிரித்தாள்.

''பாரேன்! இன்னும் எழுந்திருக்கல்லையாம். சாந்தி வீட்டு வேலையெல்லாம் தனியாகச் செய்து அவனுக்குச் சமைத்த டிபன் பாக் பண்ணி விட்டுக் கிளம்புகிறாள். அவன் இன்னும் ராஜா மாதிரி தூங்குகிறான்!''

''நீ என்ன சாதாரணப் பிரஜை மாதிரி தூங்கறியா?''

''தூக்கமா? உன்னைக் கல்யாணம் செய்து கொண்ட பிறகு தூக்கம் எங்கே?''

---

எதியோப்பியா நாட்டு காலண்டர்படி வருடத்திற்கு 13 மாதங்கள். ஒவ்வொரு மாதமும் 30 நாட்கள் என்ற கணக்கில் 12 மாதங்களும், மீதமுள்ள 5 நாட்களை 13வது மாதமாகவும் அமைத்துள்ளார்கள். லீப் வருடத்தில் 6 நாட்கள் வருகின்றன. இன்னொரு விசேஷம் என்னவென்றால், உலகமெங்கும் கிறிஸ்துமஸ் ஆண்டுவிழா டிசம்பர் 25ம் தேதி கொண்டாடும்போது, எதியோப்பியாவில் மட்டும் ஜனவரி 7ம் தேதி கொண்டாடப்படுகிறது.

ஆதாரம்: KLM விமானநிறுவனம் வெளியிட்டுள்ள பிரசுரம்

தகவல்: லலிதா.

---




லிஃப்ட் ஒரு 'தம்'முடன் தரை மட்டத்துக்கு வந்து வழி விட்டது. சாந்தி ஒரு லேசான புன்னகையுடன் ''பை, ஸீ யூ'' என்று வேகமாக நடந்தாள்.

''ஸீ யூ!''

அவள் பஸ் ஸ்டாப்புக்குப் போய்ச் சேருவதற்குள் ரமாவும் ரமேஷும் தங்கள் ஸ்கூட்டரில் அவளைத் தாண்டிக் கொண்டு சென்றார்கள், பெரிதாகப் புன்னகைத்துக் கொண்டு.

சாந்தி தனக்குள் சொல்லிக்கொண்டாள்: அதிர்ஷ்டசாலி யார்? ரமாவை அவளுக்கு ஐந்து வருஷங்களாகப் பழக்கம். படு சோம்பேறி. அவிழ்த்த புடவையை மடித்து வைக்க வேண்டும் என்கிற பிரக்ஞை ஏற்படாதவள். பாதி வேலை யெல்லாம் ரமேஷ் செய்து விடுவான். ரமாவின் அசட்டுத்தனத்தைக் குழந்தைத்தனமாக எடுத்துக் கொண்டு அவளது சோம்பேறித்தனத்தை ஒரு தாயின் கனிவோடு பொறுத்துக் கொண்டு எதையும் தப்பாக நினைக்காமல் எத்தனை ஆண்கள் இது மாதிரி இருப்பார்கள்? அதனால்தான் ரமா ரொம்பவும் சிரித்துக் கொண்டு இருக்கிறாள். எப்பவும் சிரிப்பு. எப்பவும் கிண்டல். ஒரு ஞாயிற்றுக் கிழமை வீட்டில் தங்க மாட்டார்கள். ஒரு சினிமா விடுவதில்லை.... சந்தோஷத்தை அனுபவிக்கவே பிறந்தவர்கள் மாதிரி — எப்படி இப்படி ஒரு ஜோடி அமைகிறது?

அவள் ஏறும் பஸ் வந்து விட்டது. கூட்டத்தில் முண்டியடித்துக் கொண்டு ஏறி ஓர் ஓரமாக அவள் நின்றாள். நேரமாகி விட்டது என்கிற பரபரப்பில் பஸ் விரைந்தது. அவளை மாதிரி வேலைக்குச் செல்லும் பெண்கள் ஏழெட்டுப் பேர் பஸ்ஸில் இருந்தார்கள். காலையில் அரக்கப் பரக்க வீட்டு வேலைகளை ஆரம்பிக்கையில் ஏற்பட்ட நெற்றிச் சுருக்கங்கள் இன்னும் நெற்றியில் தெரிந்தன.

அந்தச் சுருக்கங்களையும் காய்ந்துபோன கன்னங்களையும் பார்க்கும்போது அவளுக்குப் பாவமாக இருந்தது. ரமாவையும் ரமேஷையும்போல் அதிகம் பேர் இருக்க மாட்டார்கள் என்று தோன்றிற்று. நான் தனி இல்லை. என்னைப் போல் அநேகம் பெண்கள் இருப்பார்கள். ஓட ஓட விரட்டப்பட்டுக் கொண்டு குனியக் குனியக் குட்டுப் பட்டுக் கொண்டு....

அவள் பஸ்ஸில் முன்னேறி இறங்கும் இடத்தில் நின்று கொண்டாள். ஸீட்டில் உட்கார்ந்திருந்த ஒரு ஆண்கூட நிற்கிற பெண்களுக்காக எழுந்திருந்து இடம் கொடுக்கவில்லை. அவளுக்குச் சலிப்பு வந்தது. இந்த மாதிரித் தருணங்களில்தான் இவர்களுக்கு ஆண் பெண் சமத்துவம் நினைவுக்கு வரும். எழுந்து குளித்து சாப்பிட்டு மட்டுமே வந்திருக்கும் இந்த ஆண்களுக்கு இந்தப் பெண்களின் காலை டென்ஷன்கள் புரியாது. இந்தச் சமத்துவ எண்ணம் வீட்டில் இருந்திருந்தால் இங்கே நிற்கும் பெண்களுக்கு இந்த நெற்றிச் சுருக்கங்கள் இருக்குமா?

பஸ் ஸ்டாப் வந்ததும் அவள் அவசரமாக இறங்கினாள். நல்ல வேளை இன்னும் பத்து நிமிஷங்கள் இருந்தன. ஒன்பது

அடிக்க. இன்று நடராஜன் எழுந்திருப்பதற்கு முன் கிளம்பி வந்ததில் வரமுடிந்தது. இல்லாவிட்டால் ஹெட் நர்ஸிடம் பூசை கிடைத்திருக்கும்.

அதற்குப் பதில் மாலை வீடு திரும்பியதும் நடராஜனிடம் பூஜை கிடைக்கப் போகிறது. எத்தனை கேவலமாகிப் போன ஜன்மம் இது?

ஆஸ்பத்திரிக்குள் நுழைந்த மறு விநாடி அவளுக்கு எல்லாம் மறந்து போயிற்று—அவளது வாழ்வும் அதில் முக்கிய பங்கேற்கும் நடராஜனும் பின்னால் நகர்ந்து, அந்தப் பெரிய கட்டிடத்தின் நோயாளிகளுக்கு முன் துச்சமாகிப் போயின.

அவளுக்கென்றிருந்த பிரத்தியேக அலமாரியைத் திறந்து அவள் தன்னுடைய உடுப்பை எடுத்து மாற்றிக் கொண்டாள். ரெஜிஸ்டரில் கையெழுத்திட்டு அவள் ட்யூட்டி பார்க்கும் வார்டுக்குள் போகையில் ஒன்பது மணி சங்கு ஊதிற்று.

''குட் மார்னிங் நர்ஸ்!''

''குட் மார்னிங்!''

''குட் மார்னிங் சாந்தி பெஹன்!''

''குட் மார்னிங் ராஜூ பையா!'' *

அவளுக்குள் சட்டென்று ஒரு பிரவாகம் கிளம்பிற்று. வீட்டில் நித்தம் அனுபவிக்கும் சிறுமைகள் எல்லாம் அர்த்தமற்றுப் போயின. அவள் சுறுசுறுப்புடன் சட்டென்று முகத்தில் மலர்ந்த புன்னகையுடன் வேலையைத் துவக்கினாள்.

அந்தரத்தில் ஒரு கால் கட்டி நிற்க சர்மா பேப்பரில் மூழ்கியிருந்தார்.

''எப்படி இருக்கிறீர்கள் சர்மா ஸாப்?''

சர்மாவின் முகத்தில் லேசான புன்னகை கோடிட்டது.

''நன்றாயிருக்கிறேன்!''

''அப்பொழுது இன்னும் கொஞ்சம் அதிகமாகச் சிரியுங்களேன்!''

''இந்த மாதிரி அந்தரத்தில் ஒரு கால் மாட்டிக் கொண்டிருக்கும்போது 'எனக்கு இத்தனைதான் சிரிக்க முடியும்!''

**இந்தியாவில் மொத்தம் 2,900 ஆரம்பப் பாடசாலைகள் இருக்கின்றன.**

**'அவ்வளவுதானா?' என்று ஆச்சரியப் படாதீர்கள். இவை ஆசிரியர் ஒருவர்கூட இல்லாமல் 'இயங்கும்' பள்ளிக்கூடங்கள்!**

**— சண்டே**

**— ராமுசாமி**




அவள் மென்மையாகச் சிரித்து அவரது தோளில் அனுதாபத்தோடு தட்டினாள். பிறகு மெல்லிய குரலில் சொன்னாள்:

''அந்தரத்தில் நின்றாலும் கால் பிழைத்ததே என்று சந்தோஷப்படுங்கள் சர்மா ஸாப்! அதோ அந்தக் கடைசி பெட்டைப் பார்த்தீர்களா? நேற்று ஒரு காலை ஆம்புடேட் செய்து விட்டார்கள்!''

சர்மா சட்டென்று மௌனமானார். நிதானமாகப் பேப்பரை மடித்து வைத்து அவளைப் பார்த்தார்.

''டூ பேட்.... இல்லே?''

''உம். கஷ்டம்தான். ஆனால் ரொம்பக் கஷ்டம் இல்லே. இன்னொரு கால் இருக்கிறதே!''

''இப்படியே எல்லா பேஷன்ட்ஸ்ஸையும் ஏமாற்றுவது உனக்குப் பழக்கமாகிவிட்டது நர்ஸ்!''

அவள் சிரித்தாள்.

''ஏமாற்றுகிறேன் என்பது ரொம்ப மோசமான வார்த்தை சர்மா ஸாப். பேஷன்ட்ஸ்ஸுடைய பிரமைகளை அகற்றுவது என்னுடைய கடமை....

''ஸ்பான்ஜ் பாத்துக்கு நீங்கள் ரெடியா?''

''காத்திருக்கிறேன்.''

''இருங்கள். பத்து நிமிஷத்தில் வருகிறேன்.''

''குட் மார்னிங் நர்ஸ் ஆன்டி!''

சட்டென்று பரவிய ஒரு சந்தோஷத்துடன் அவள் திரும்பினாள்.

ஏழு வயதுச் சிறுவன் மிக்கி ஒரு கையும் காலும் பிளாஸ்டரில் ஸ்லிங்கில் தொங்க இன்னொரு கையை அவளைப் பார்த்து அசைத்தான்.

''குட்மார்னிங் மிக்கி! எப்படி இருக்கே?''

''வலிக்கிறது.''

''எங்கே?''

''இங்கே!''

''சரியாப் போயிடும்!''

''எப்போ?''

''சீக்கிரம். நீ சமர்த்தா இரு. கால் அசைக்காம இருந்தாயானா, பத்து நாளிலே சரியாப் போயிடும்.''

''விளையாடலாமா?''

''ஓ!''

மிக்கியின் கண்களில் ஒரு பிரகாசம் தெரிந்தது.

''கிரிக்கெட்?''

''அது கொஞ்ச நாள் கழிச்சு. இனிமே தனியா ரோடை கிராஸ் பண்ணாதே!''

''ஓ.கே!''

படுக்கைக்குப் பக்கத்தில் நின்றிருந்த மிக்கியின் அம்மாவின் கண்களில் நீர் ததும்புவதைப் பார்த்துச் சாந்தி அவசரமாக அவளுடைய தோளைப் பற்றினாள்.

''மிக்கிக்கு ஒண்ணுமில்லே மிஸஸ் மெஹ்ரா. பத்தே நாள் சரியாகி விடுவான். ஸ்பாஸ்டிக்ஸ் செலக்ஷனுக்குப் போய் அங்கிருக்கும் குழந்தைகளைப் பார்த்து விட்டு வாருங்கள். நீங்கள் எவ்வளவு அதிர்ஷ்ட

* Bhaiya — சகோதரன்

சாலி என்று தெரியும். நீங்கள் கலங்கினால் குழந்தைக்குத் தைரியம் போய்விடும்.''

மிஸஸ் மெஹ்ரா கண்களைத் துடைத்துக் கொள்கையில் அவள் வேறு பேஷண்ட்டைப் பார்க்கச் சென்றாள்.

எத்தனை விதமான உபாதைகள்! பிறவியினால் ஏற்படும் தொல்லைகள் போதாது என்று தாங்களாகப் போய் உடலைச் சேதப் படுத்திக்கொள்ளும் மனிதர்கள்! தெரியாத் தனமாக அஜாக்கிரதையாக விபத்தில் மாட்டிக்கொண்டு கையையும் காலையும் ஒடித்துக் கொண்டு மறுபடி ஓட முடியுமா நடக்க முடியுமா என்று தவிக்கும் ஜன்மங்கள்!

கடைசி படுக்கையில் ராம்லிங் இன்னும் மயக்கத்திலிருந்தான். ஸெப்டிக் ஆகி இருந்த காலை முழங்காலுக்குக் கீழே நேற்றுத்தான்வெட்டிஎடுத்தார்கள். இரண்டு நாட்களாக அவன் பட்ட அவஸ்தையும் கத்தின கத்தலும் சகிக்க முடியாமல் இருந்தது. அவன் அருகில் அவனுடைய வயதான தாய் திக்பிரமை அடைந்தவள் போல் உட்கார்ந்திருந்தாள்.

சாந்தி அவள் அருகில் சென்று, ''மாதாஜி உன் பிள்ளை சரியாகிப் போய்விடுவார். கவலைப்படாதீர்கள்!'' என்றாள்.

ராம்லிங்கின் அம்மா அவளை ஒரு வெற்றுப் பார்வை பார்த்துப் பிறகு ஆகாசத்துக்குக் கையைக் காண்பித்து ஏதோ பிஹாரியில் சொன்னாள்.

சாந்தி அவள் முதுகைச் சமாதானமாகத் தட்டிவிட்டுத் தன் வேலைகளைக் கவனிக்கச் சென்றாள்.

சர்மாவுக்கு ஸ்பான்ஜ் பாத்திலிருந்து வேலை தொடங்கிற்று...

மாலை ஐந்துவரை நேரம் போவது தெரியாமல் பறந்தது.

ஐந்து மணிக்குத் தலைமை நர்ஸ் மிஸ் வயலட் கூப்பிட்டனுப்பினாள்.

''சாந்தி, இந்த அக்கௌண்டைக் கொஞ்சம் செக் பண்ணிக் கொடு. ரேகாவைச் செய்யச் சொன்னேன். அவள் பொறுப்பில்லாதவள். சரியாக இருக்கிறதா என்று பார்.''

அக்கௌண்ட் புஸ்தகத்துடன் உட்கார்கையில் காலையில் ஐந்து மணிக்கு எழுந்த 'உடம்பு அசந்து போயிருந்தது. அநேக தப்புக்கள் இருந்த கணக்கை ஒரு வழியாகச் சரிசெய்து நிமிர்வதற்குள் கிட்டத்தட்ட ஆறு மணி ஆகிவிட்டது. அவள் மிஸ் வயலெட்டிடம் புத்தகத்தை ஒப்படைத்துவிட்டு உடையை மாற்றிக் கொண்டு வீட்டுக்குச் செல்லப் படியிறங்கினாள். ஸ்ட்ரெச்சரில் ஓர் உருவம் காஷுவாலிட்டியை நோக்கி விரைந்து கொண்டிருந்தது. 'ஒரு ஆக்ஸிடெண்ட் கேஸ்' என்று அவள் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டு பஸ் ஸ்டாப்பை நோக்கி நடந்தாள். (தொடரும்)

---

# கண்ணீரில் எழுதாதே

கதையை ஜவ்வாய் எழுதியிருக்கிறார்கள். தங்கள் பொறுமையின் பேரில் அபார நம்பிக்கையுள்ளவர்கள் இப்படம் பார்த்து மீண்டும் தங்களைச் சோதித்துக் கொள்ளலாம். கேமரா ரகுநாத ராயைத் தவிர அனைவரும் 'ஏதோ' கையில் பூமாலை என சினிமாவைச் சின்னா பின்னம் செய்திருக்கிறார்கள்.

குழப்பத்தின் மறு பெயர் ஹீரோ. இரவுக் காட்சிகளில் முகம் தெரியாதபடி இருளோடு ஒன்றி விடுகிறது. அங்க சேஷ்டைகளில் விஜய பாபுவை ஞாபகப்படுத்தும் அறிமுக வில்லன் லட்சுமிகாந்த். வழக்கமாய் வார்த்தைகளைப் பொரிந்து தள்ளும் வனிதா கதாநாயகியாக உயர்ந்திருக்கிறார். கேமரா குளோசப்புக்கு வரும்போதெல்லாம் சிரித்து. எண்ணிய வார்த்தைகளை உதிர்த்து - எல்லாம் விழலுக்கு இறைத்த நீர்.

சம்பந்தம் இல்லாமல் திடீரென்று ஒரு காதல் ஜோடி முளைக்கிறது. ஊர் சுற்றுகிறது. டூயட் பாடுகிறது. குளிக்கிறது. வேறு படம் பார்க்கிறோமா என்ற சந்தேகம் வந்து நம்மைக் கிள்ளிப் பார்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. எதையெதை, எப்படி, எந்த அளவு சொல்லுவது என்ற சினிமா அகராதியை டைரக்டர் புரட்டிப் பார்ப்பது எதிர்கால ரசிகனுக்கு நயம் பயக்கும். சிக்கிக்கொண்டவன் இன்றைய ரசிகன்.

| | |
|---|---|
| இதமான ஏ.சி.க்கு (பாண்டி பாலாஜி) | ரூ. 0–50 |
| கேமராவுக்கு | ரூ. 0–25 |
| மொத்தம் | ரூ. 0–75 |
| கொடுப்பது | ரூ. 2–90 |
| கிடைப்பது | ரூ. 0–75 |
| தண்டம் | ரூ. 2–75 |

- நளினி சாஸ்திரி






பால் டம்ளரை மேஜை மேல் வைத்து விட்டு அவன் தயங்கி நிற்கவும், ஆங்கில நாவலின் அட்டையில் அலங்கோலமாகப் படர்ந்திருந்த பெண்ணின் படத்தைப் பசியோடு மேய்ந்து கொண்டிருந்த பாஸ்கர் எரிச்சலோடு நிமிர்ந்தான். ''என்னடா?''

''மூணு மாசமாக் கேட்டுக்கிட்டே இருக்கேன். ஐயா கண்டுக்கவே மாட்டேங்கறீங்க... அம்மாவுக்கு உடம்பு ரொம்பவும் முடியாம இருக்காம். கடுதாசி வந்திருக்கு... ஒரு நூறு ரூபா குடுத்திங்கன்னு...''

அவன் முடிக்கும் முன்பாக பாஸ்கர் தன் கையிலிருந்த புத்தகத்தை மேஜை மேல் வேகமாக விட்டெறியவும் அந்த அதிர்ச்சியில் டம்ளரிலிருந்த பால் சிதறி மேஜையை நனைத்தது. ''உனக்கு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்... இன்ட்ரஸ்டா படிச்சிக்கிட்டு இருக்கும்போது உன் தரித்திரம் புடிச்ச வாயைத் திறக்காதேன்னு. கையிலே காசில்லாமல் நானே கஷ்டப்பட்டுக்கிட்டு இருக்கேன். தொரைக்கு நூறு வேணுமாமில்லே... போப்போ.''

பாஸ்கர் எந்தவித பாதிப்பும் இல்லாமல் மீண்டும் பக்கங்களில் இலயித்துவிட, அவன் ஏதோ ஒரு வேதனை நெஞ்சில் ரம்பமிட, மிகவும் தளர்ந்தவனாக அங்கிருந்து அகன்றான். கட்டிலின் மேல் கிடந்த மெத்தையைத் தட்டி, சீர்படுத்தி, போர்வையை உதறி விரித்து, பாஸ்கருக்குப் படுக்கையைத் தயார் படுத்திவிட்டு, மூலையில் சுருண்டு கிடந்த கோரைப் பாயையும் தலையணையையும் சுமந்துகொண்டு வராந்தாவுக்கு வந்தான். பாயை விரித்துச் சுவரில் சாய்ந்தபடி அமர்ந்து கொண்டவன் இங்கு புறப்பட்டு வரும்போது அம்மா சொன்னதை நினைத்துப் பார்த்தான்.

''இத பாரு முத்து! பரம்பரை பரம்பரையா அவுங்க உப்பைத் தின்னுதான் பொழைப்பு நடத்தறோம். அந்த நன்றியை மறக்காம அவங்க மனசுப்படி நடந்துக்கோணும்கிறதுதான் உங்கப்பாரு ஆசை. பாத்து புத்தியாப் பொழைச்சுக்கோ.''

அவனுக்குத் திடீரென்று வாய் விட்டு அழுவதும்போல ஏதோ ஒரு துயரம் இதயத்தைப் பிசைந்தது.

நவப்பட்டி பஞ்சாயத்து போர்டின் பிரஸிடெண்டும், பெரிய பண்ணையாருமான கந்தசாமியின் ஒரே மகன் பாஸ்கர் இரண்டு முறை பி.ஏ. பரீட்சையில் 'கோட்' அடித்துவிட்டு மூன்றாவது முறை 'முயற்சி' செய்வதற்காக இங்கு வந்து தங்கி இருக்கிறான். அவன் ஓட்டலில் சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக் கொள்ளக் கூடாதே என்ற அக்கறையில் எக்கச்சக்கமான வாடகையில் தனி வீடு பார்த்து, சமைத்துப் போடவும் எடுபிடி வேலைகளைச் செய்வதற்கும் முத்துவை அவனோடு அனுப்பியிருந்தார் பண்ணையார். பாஸ்கரும் ஏதோ ஒரு டுடோரியல் காலேஜில் சேர்ந்திருப்பதாகக்காட்டிக் கொண்டு காசைக் கரியாக்கிக் கொண்டிருந்தான். பத்தாதற்குப் பண்ணையார் வேறு இந்த முறை பரீட்சைக்குப் போனால் போதும் — மற்றபடி பார்க்க வேண்டிய இடத்தை, பார்க்க வேண்டிய விதத்தில் பார்த்து 'பாஸ்' போட ஏற்பாடு செய்வதாக மகனிடம் உறுதிகூறி இருக்கவே பாஸ்கர் படிப்பதைத் தவிர மற்ற காரியங்களில் அதிக அக்கறை காட்டிக் கொண்டிருந்தான்.

முத்துவின் குடும்பம் பரம்பரை பரம்பரையாகப் பண்ணையார் வீட்டுக்குச் சேவகம் செய்து வருகிறது. இந்தப் பரம்பரை வியாதியிலிருந்து தப்பி ஏதாவது வேலை பார்க்கலாம் என்று ஆசைப்பட்ட முத்து தன் படிப்புக்கு ஏதாவது உதவி கிடைக்கும் என்ற நம்பிக்கையோடு பண்ணையாரை அணுகவும், அது அவன் எலிமெண்டரி ஸ்கூல் படிப்புக்கே ஆபத்தாக முடிந்தது.

''உன் மவன் படிச்சு கலெக்டராகிக் காரும் பங்களாவுமா உன்னை வச்சுக்கறது தான் பாழாப் போச்சா! பண்ணையிலே வேலை செய்யறவனுக்குப் படிப்பு எதுக்குடா— போடா போய் நாளையிலேருந்து உன் மகனை நம்ம மாட்டுத் தொழுவத்துக்கு வேலைக்கு அனுப்பு.''



பண்ணையாரிடமிருந்து தன் தந்தை மூலம் கிடைத்த பதிலைக் கேட்டதும் முத்து ஏமாற்றத்தால் இதயம் வெதும்பினான்.

அவன் தந்தை பண்ணையாரின் கட்டளையை நிறைவேற்றுவதில் குறியாக இருந்தார். மறுநாள் ஸ்கூலுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த மகனிடம், ''பெரிய இடத்துப் பொல்லாப்பு நமக்கு வேண்டாமிடா ராஜா—கஞ்சிக்கே கஷ்டப்படற நாம காலேசு படிப்பெல்லாம் படிக்க முடியாது. ஐயா உன்னைத் தொழுவத்துக்கு வேலை பார்க்க வரச் சொல்லி இருக்காரு. நீ வேலைக்குப் போயி நாலு காசு சம்பாரிச்சா எனக்குத்தாண்டா பெருமை'' என்று சொல்லவும் முத்து சிலையாகி விட்டான். 'கொட்டிவிடுகிறேன்' என்று தயாராக நின்றிருந்த கண்ணீர் முத்துக்களைப் புறங்கையால் துடைத்தெறிந்து விட்டு, ''கடைசித் தடவையா ஸ்கோலுக்குப் போயிட்டு வந்துடறேன்'' என்று கெஞ்சிக் கேட்டு அனுமதி வாங்கிக் கொண்டு அவன் பள்ளிக்குச் சென்றும் பலனில்லை. அவன் பெயர் ஏற்கனவே பட்டியலிலிருந்து நீக்கப் பட்டிருந்தது. எல்லாம் பண்ணையாரின் ஏற்பாடு. அதற்குப் பின் முத்து மாட்டுத் தொழுவத்தில்... களத்துமேட்டில்...பண்ணையார் வீட்டில்... பம்பரமாகச் சுழன்று வேலை செய்தான். அப்படி இருந்தும் அரை வயிற்றுக் கஞ்சிக்கே ஆலாய்ப் பறக்க—வேண்டி இருந்தது. அவன் தந்தையும் காலமான பின்பு குடும்பக் கஷ்டம் என்றால் எப்படி இருக்கும் என்பதைப் புரிந்து கொண்டு, அதில் புதைந்து. மீண்டு வர இயலாமல் காலத்தை ஓட்டிக் கொண்டு இருக்கிறான் முத்து. திறமையாக இவனிடமிருந்து வேலை வாங்கிக்கொள்ளும் பண்ணையார் இவனுடைய வறுமையைப் பற்றி நினைத்துக் கூடப் பார்ப்பதில்லை. பாஸ்கரோடுமுத்துவை அனுப்பி வைத்த பின் இன்னும் அலட்சியமாக நடக்கத் தொடங்கி விட்டார். வயதான கிழம் வாய் பேசவா போகிறது என்ற தைரியத்தில் மாதா மாதம் பேருக்கு ஏதோ கொஞ்சம் நெல்லை முத்துவின் தாயாருக்குக் கொடுப்பதோடு தம் கடமை முடிந்தது போல் கைகழுவிக் கொண்டார். முத்துவின் தாயோ அந்த நெல்லை வைத்துக் கொண்டு அரிசியாக்கவும் முடியாமல், அரைப் பட்டினி கிடக்கவும் முடியாமல் அனல்மேல் புழுவாகத் தவித்துப் போவாள். என்றாலும் பண்ணையார் குடும்பத்தின் மேல் ஏற்பட்டிருந்த பரம்பரை பக்தி, தனக்கு இழைக்கப்படும் பாவத்தையும் நற்பலனாக வரவேற்கும் பக்குவத்தை அவளிடம் வளர்த்து விட்டிருந்தது. டவுனில் மகன் ஏதோ மகாராஜா போல் வாழ்வதாக நினைத்துக் கொண்டு, மனம் நிறைந்து போய், தனது மனக் கவலைகளை மறந்து விட்டிருந்தாள் அவள். கடந்த மூன்று மாதங்களாக உடல்நிலை மோசமாகிக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் கிழவி காகக் காக மகனுக்குக் கடிதாசி எழுதிக்கொண்டிருந்தாள். கடைசியாக வந்த கடிதத்தில் கிழவியின் உடல்நிலை மிகவும் பாதிக்கப் பட்டிருப்பதாகவும், பணம் உடனடியாக

அனுப்பும்படியாகவும் அடுத்த வீட்டுக் காரர் அக்கறையோடு எழுதியிருந்தார். முத்து என்ன தான் செய்வான்! பாவம்! பாஸ்கரோ பண்ணையாருக்குப் பத்துப் படி மேலாக இருந்தான். குடிப்பதற்கும், பெண் களோடு கும்மாளம் போடுவதற்கும் செலவழிப்பதில் கால் பங்கைக் கூட முத்துவுக்கு அதுவும் கடனுக்குக்கூடத் தரமாட்டான். வீட்டுச் செலவுக்குக் கொடுக்கும் பணத்துக்குப் பைசா சுத்தமாகக் கணக்குக் கேட்பான். சாப்பாடு போட்டு மாசக் கடைசியில் அவன் முத்துவுக்குச் சம்பளம் என்னும் பெயரில் தரும் பணம் முத்துவுக்கு ஒரு காட்டன் சட்டை எடுத்துக் கொள்ளக்கூடக் காணாது. இத்தனைக்கும் பாஸ்கர் இல்லாத காரணங்களையெல்லாம் காட்டி வீட்டிலிருந்து பணம் வாங்குவான். அதுவுமில்லாமல், பக்கத்தில் பெண்கள் கல்லூரியில், ஹாஸ்டலில் தங்கிப் படிக்கும் பாஸ்கரின் மாமா பெண் வனிதா வேறு வாரத்துக்கு ஒரு முறை வந்து தன் அத்தானுக்காகக் கணிசமான தொகையை 'அழுது'விட்டுப் போவாள். மற்ற சமயங்களில் 'மைனர்' கணக்காக ஊர் சுற்றும் பாஸ்கர் ஞாயிற்றுக் கிழமைகளில் மட்டும் படுயோக்கியனாக மாறி விடுவான். ஏனென்றால் அது வனிதா வரும் நாளாயிற்றே! என்ன இருந்தாலும் அவள் வருங்கால மனைவி அல்லவா?

அன்று வெள்ளிக் கிழமை. அதிகாலையில் எழுந்து வழக்கம் போல் அருகிலிருக்கும் முருகன் கோயிலுக்குப் போய்விட்டு அறைக்குத் திரும்பிக் கொண்டிருக்கும்போதுதான் முத்து கவனித்தான் தூரத்தில் வனிதாவேகமாக வந்து கொண்டிருந்தாள். உடனே பாஸ்கரை எச்சரிக்க வேண்டும். அவன் வனிதா ஞாயிற்றுக் கிழமை தானே வரப்போகிறாள் என்ற நினைப்பில் சற்று எக்கச் சக்கமான நிலையில் இருந்துவிடக் கூடும். பரபரப்பாக பாஸ்கரை அழைத்தபடி உள்ளே நுழைந்த முத்து அவன் நினைத்ததைப் போல பாஸ்கர்.... சே! நல்ல நாளும் அதுவுமாய்... அந்தப் பெண் சட்டென்று பாஸ்கரை விட்டு விலகித் திருதிருவென்று விழித்தாள்! பாவம் வீடு பொருக்கி. பத்து பாத்திரம்

# ஒப்போல்




கொஞ்ச நாட்களாக ஒதுங்கியிருந்த கே. எஸ். ஸேதுமாதவன் ஆர்ப்பாட்டம் ஏதும் இல்லாமல் நல்ல படத்துடன் மறுபடியும் முகம் காட்டுகிறார். சின்னதாய் மூன்றே கேரக்டர்கள். அவை மூன்றுக்கும் இடையே உள்ள பாசப் பிணைப்பை விவரிப்பதுதான் கதை.

பருவத்தில் சுயம் இழந்து திருமணம் ஆகாமலே ஒரு குழந்தைக்குத் தாயான மாலு (மேனகா)வை, அவள் பெற்ற மகன் அப்புவே உண்மை தெரியாமல் அக்கா என்று அழைக்கிறான். மாலுவை மாஜி பட்டாளக்காரன் கோவிந்தன் (பாலன் கே. நாயர்) மணந்து மலைநாட்டுக்கு அழைத்துப் போகிறான். கூடவே அப்புவும் போகிறான். சிக்கல் உருவாக, கட்டிய கணவனிடம் உண்மையைச் சொல்லிப் பிரியத் துணிகிறாள். அன்பு என்றாலே என்ன என்று தெரியாத கோவிந்தன் மனம் மாறி மாலுவை அப்புவுடன் ஏற்றுக் கொள்கிறான்.

அப்புவாய் வரும் மாஸ்டர் அரவிந்த் நடிக்கவில்லை. அவன் செய்வதெல்லாம் இயல்பாய் இருக்கிறது. திருவிழாகாண முடியாமல் வாசலில் நின்று ஏக்கமாய்ப் பார்ப்பது, தன்னை அடித்த கோவிந்தனைக் 'கொல்லும்.. கொல்லும்' என்று பொருமுவது, ஏன், அவன் வந்து போகும் எல்லாக் காட்சிகளுமே மனத்தில் நிற்கிறது. நேஷனல் அவார்ட் கொடுத்தது தகும்.

புது மனைவியிடம் தனித்திருக்கத் தடையாக இருக்கும் அப்புவை அடிப்பது, அவனிடம் செல்லம் காட்டும் மாலுவைக் கோபிப்பது என்று பாலன் கே. நாயருக்கு நல்ல சந்தர்ப்பங்கள். சரியாகச் செய்திருப்பதால் இவருக்குச் சிறந்த நடிகர் என்ற பரிசு.

பின்னணி இசையில் புதிய முறைகளைக் கையாண்டிருக்கிறார் எம். பி. ஸ்ரீனிவாசன்.

திரைக்கதை வசனம் எழுதிய எம். டி. வாசுதேவன் நாயரும், டைரக்ட் செய்த ஸேதுமாதவனும் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். 80-ல் இந்தியாவில் இரண்டாவது சிறந்த படம் இது. -'சிந்து-ஜீவா'

தேய்த்து விட்டுப் போகும் பெண்! பாஸ்கரின் பச்சை நோட்டுக்களுக்குப் பலியாகியிருப்பாள்! பாஸ்கர் காட்டுத்தனமாகக் கத்தினான்.

''ஏண்டா அறிவு கெட்ட முண்டம்! சோறுதானே திங்கறே! கொஞ்சமாவது இங்கிதம் தெரியுதா? சரியான காட்டாறு இருக்கியே.''

''என்னங்க பண்றது... வனிதா அம்மா வந்துக்கிட்டிருந்தாங்க... அதனால....''

''என்னது! வனி....'' அதற்கு மேல் பயம் தொண்டையில் துணியை வைத்து அடைக்க அவசரமாகத் தன்னையும், உடைகளையும் சீர்படுத்திக் கொண்டு, பாஸ்கர் திரும்புவதற்குள் ''ஹாய் பாஸு'' என்று வாசலில் நின்றாள் வனிதா.

ஒரு கணம்... ஒரு கணம்தான் யோசித்தான் பாஸ்கர்! அடுத்த கணம் வேகமாகத் திரும்பி முத்துவின் கன்னத்தில் ஓங்கி அறைந்தான். எதிர்பாராத அந்தத் தாக்குதலால் நிலைகுலைந்து அறை மூலையில் விழுந்த முத்து எழுந்திருப்பதற்குள் ''வெட்கங் கெட்ட நாயே! வெளியே போயிட்டு வருவதற்குள்ளே... எந்தத் துணிச்சல்லேடா இதைச் செஞ்சே! உன்னைப் போய் யோக்கியன்னு நினைச்சேனடா! இது வெளியே தெரிஞ்சா யாருடைய மானம் போறது... நல்ல நாளும் அதுவுமாய்... சேச்சே! தகுந்த சமயத்திலே நான் வந்ததாலே ஆச்சு... இல்லேன்னா.....'' என்று முத்துவைப் பார்த்துச் சத்தம் போட்டான் பாஸ்கர். அப்போதுதான் வனிதாவைப் பார்த்தவன் போல் ''என்ன வனிதா... இன்னிக்கு...'' என்று இழுத்தான்!

உள்ளே நடந்த ஆர்ப்பாட்டங்களைப் பார்த்துத் திகிலடைந்து போயிருந்த வனிதா ''என்ன ஆச்சு பாஸு'' என்றாள் பயத்தோடு.

பாஸ்கர் ஏதோ ஒரு பாவ காரியத்தின் நடுவே பாதியில் புகுந்து அதைத் தடுத்துவிட்டவன் போல நிம்மதிப் பெருமூச்சு விட்டபடி, அரை குறை ஆங்கிலத்தில் முத்து அந்த வேலைக்காரப் பெண்ணிடம் தவறாக நடந்துகொள்ள முற்பட்டான் என்று கதை அளந்தான். இடையே அந்த வேலைக்காரப் பெண்ணைப் பார்த்துப் போகும்படி சைகை காட்டினான். அவள் விட்டால் போதும் என்பவளைப் போல ஓடிப்போனாள்.

பாஸ்கர் சொல்லி முடித்ததும் முத்துவை மிகுந்த வெறுப்போடு பார்த்த வனிதா ''நெத்தியிலே பளிச்னு திருநீறை வைச்சுக்கிட்டு இப்படி பாவ காரியம் பண்றான் ராஸ்கல் — முதல்லே அவனைத் துரத்தியடியுங்க சொல்றேன்'' என்று வெடித்தாள்.

முத்து பாஸ்கர் சொல்லும் வரை காத்திருக்காமல் மெல்ல நகர்ந்தான். ''ஊருக்கு வரச் சொல்லி அப்பா திடீர்னு லெட்டர் போட்டிருக்காரு. அதைச் சொல்லிட்டுப் போகலாம்னு இங்க வந்தா இப்படியொரு கூத்து நடந்துகிட்டு இருக்கு'' என்ற வனிதா தன் சேலைத் தலைப்பால் பாஸ்கரின் முகத்தைத் துடைத்து விடுவதைத் துயரச் சுமையோடு பார்த்தபடி வாசலைக் கடந்தான் முத்து.

வனிதாவை அனுப்பிவிட்டு வெளியே நின்றிருந்த முத்துவைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு உள்ளேவந்த பாஸ்கரன் பாக்கெட்டிலிருந்து கத்தையாகப் பணத்தை எடுத்து அவன் கையில் வைத்தான். ''ஸாரிடா முத்து! வனிதா கிட்ட இருந்து தப்பிக்க எனக்கு வேற வழியே தெரியலே.''

முத்து அவனையும், அவன் கொடுத்த பணத்தையும் மாறி மாறிப் பார்த்தான். காலில் விழாத குறையாக அவன் கெஞ்சியபோது கிடைக்காத பணம் இப்போது பாஸ்கரைக் காட்டிக் கொடுக்காமல் இருப்பதற்கு 'லஞ்சமாக'க் கிடைக்கிறது. விரக்தியாகச் சிரித்த முத்து தன் கையிலிருந்த தந்தியைப் பாஸ்கரிடம் நீட்டினான். அதை வாங்கிப் படித்துவிட்டுப் போலியான பரிதாபத்தோடு சூள் கொட்டினான் பாஸ்கர்.

''உங்கம்மா காலமாயிட்டாங்களாமே? பாவம் இதையும் வச்சுக்கோ'' என்றபடி மேலும் சிலகரன்ஸி நோட்டுக்களை முத்துவின் கையில் வைத்தான். முத்து இப்போதும் வடித்த சிலை போல் நின்று பாஸ்கரைப் பார்வையால் வகிர்ந்து கொண்டிருந்தான்.

''அம்மாவைப் பிழைக்க வைக்க ஒரு பைசாக் கூடத் தராதவன் இப்போது அவளை அடக்கம் செய்ய அள்ளிக் கொடுக்கிறான். எதனால்? அவனுடைய அயோக்கியத்தனத்துக்கு ஆதரவு காட்டியதால்! அடப் பாவிகளே! அலட்சியப்படுத்தி, அநியாயமாய் ஓர் உயிரைக் குடித்துவிட்டு அதற்கு அலங்காரப் பந்தல் போடும் ஆணவக்காரர்களே! நீங்கள் எல்லாம் தேவாரம் பாடிக் கொண்டே தெய்வச்சிலைகளைக் கடத்துபவர்கள்! அஹிம்சையை உபதேசித்துக்கொண்டே உயிர்வதை செய்யும் உன்மத்தர்கள்! கையை வெட்டி விட்டு வளையல் போட வரும் வக்ர புத்திக்காரர்கள்!... என்றெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டிருந்த முத்து சற்றும் எதிர்பாராத விதமாக பாஸ்கரின் முகத்தில் காறித் துப்பினான். கையில் இருந்த கரன்சிகளை அவன் முகத்தில் விட்டெறிந்தான். ''தூ! நீயும் ஒரு மனுஷனய்யா! எங்கம்மாவோட பொணம் அழுகி நாறினாக்கூட உன் அசிங்கம் புடிச்ச காசை வைச்சு அதை அடக்கம் பண்ண மாட்டேன்யா... நீயுமாச்சு உன் வேலையுமாச்சு...'' என்று வேதனையோடு ஓலமிட்டபடி தெருவில் இறங்கினான் முத்து.

வதை பட்ட உயிர் போல இதயம் துடிக்க அவன் எறிந்துவிட்டுப் போன பின்பும் எந்தப் பாதிப்பும் இல்லாமல் முகத்தைத் துடைத்துக்கொண்ட பாஸ்கர், ''முத்து என் கைக் கடிகாரத்தைக் கிளப்பிக் கொண்டு கம்பி நீட்டிவிட்டான்'' என்று தன் தந்தைக்குக் கடிதம் எழுத மேஜையின் முன் அமர்ந்தான்!

---

காதலி : உங்களுக்கு வீணை மீட்டத் தெரியுமா?

காதலன் : எந்த சேட் கடையிலே வைச்சிருக்கேன்னு சொல்லு! எவ்வளவு பணமானாலும் கொடுத்து மீட்டுத்தரேன்! ''பானுமதி''

# இதோ இன்க்ரிமின் தலைமுறை

## பெரிதாக மட்டுமல்ல
## சிறப்பாக வளர!

வளரும் பருவத்தில் மிகமிகப் பெரிய வேறுபாட்டை வழங்குவது இன்க்ரிமின். உண்மையென்னவெனில் இதர டானிக்குகளை விட ஒரு படி மேலானது இன்க்ரிமின். ஆரோக்கியமான வளர்ச்சிக்குத் தேவையான வைட்டமின்களோடு கூட இன்க்ரிமின் டானிக்கில் லைஸின் உள்ளது. லைஸின் பசியைத் தூண்டுகிறது. ஒரு குழந்தை நன்கு வளர, நன்கு சாப்பிட வேண்டும் என்பது எந்தத் தாய்க்குத்தான் தெரியாது?

சிறப்பாக உண்பதை சீரிய வளர்ச்சியாக்குவது இன்க்ரிமின்.




Lederle தயாரிப்பு

*அமெரிக்கன் சையனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு ட்ரேடு மார்க்.

14 வயது வரையிலான குழந்தைகளுக்கு சிரப்
2 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு டிராப்ஸ்



# இன்க்ரிமின்* டானிக்

## சிறப்பாக உண்பதை சீரிய வளர்ச்சியாக்குகிறது.

Sista's-INC-973/80 Tam. G



# ஒரு எழுத்தாளரும்

ஜே.எஸ்.ராகவன்

"அப்பாடா! ஒரு வழியா கதையை எழுதிமுடிச்சாச்சு. விரலெல்லாம் வலிக்கிறது. ஆமாம், யாரெல்லாம் வெய்ட் பண்றாங்கன்னு சொன்னே?''

''சே! நீங்க ரொம்ப மோசம். இப்படியா எடிட்டர்களைக் காக்கவைக்கிறது? சாவியும், மணியனும் ஒரு மணியா ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக்கொள்ளாமல் ஹாலில் உட்கார்ந்து இருக்காங்க. அப்புறம், பாலன், எஸ்.ஏ.பி., ராஜேந்திரன் எல்லோருக்கும் உங்களைப் பாக்கணு மாம்!''

''இதென்ன கூத்து? இப்படியா ஒரு மனுஷனை இக்கட்டில் வைப்பது? யாரை முதலில் கூப்பிடறது? ஹூம்... அடேடே மிஸ்டர் மணியன்! வாங்க... உள்ளே வாங்க!''

''நமஸ்காரம். டிம்பக்டூலேர்ந்து, உருகுவே, உகாண்டா, ஸாம்பியா, கம்போடியா, அலெக்ஸாண்டிரியா வழியா நேத்திக்கு மெட்ராஸ் வந்தேன். போன வாரம் கான்கார்டில் சூப்பர்சானிக் ஸ்பீடில் பறந்து கொண்டு இருக்கும்போது, உங்களுடைய 'ஆவி உலகத்தில் இட்லி' என்ற கதையை 'மயனி'ல் படித்தேன். என் மனைவி லலிதா அனுப்பி யிருந்தா. பிரமாதம்! இதயத்துக்கு உங்க பிரச்னைக் கதை வேணும். போன மாசம் கொடுத்தீங்களே, 'தொலைந்த சாவி'ங்கிற கதை.அது மாதிரி பஞ்ச்சோட இருக்கணும்!''

''அனுப்பறேன்... அப்பா! ஒருத்தரைப் பார்த்து அனுப்பியாச்சு! அடுத்தது யாரு வரப் போறது? அது! சாவி சாரா?''

''ஆமா. ஒரு வேடிக்கை பாருங்கோ, அபூர்வமா இன்னிக்கு டி.வி.யிலே சினிமா பார்க்கலாம்னு 'ஆன்' பண்ணினேன். என்ன படம் தெரியுமா? 'இதயத்தில் நீ'. பொட்னு ஆஃப் பண்ணிட்டு வெளியே கிளம்பிட்டேன். பேரே பிடிக்கலே. எதையோ பேசிண்டு இருக்கேனே! உங்க குறுநாவல் வர இஷ்யூலே, அட்டைப் படமா உங்க கலர் போட்டோ போடணும்னு ஆசை. நாளைக்கு என் பிள்ளையைக் காமிராவோட அனுப்பறேன்.''

''அட! போட்டோ எல்லாம் எதுக்கு சார்?''

''அந்த 'பாச்சா' எல்லாம் பலிக்காது. நாளைக்கு அடுத்த கதையை அனுப்புங்கோ. எழுதச் சோம்பேறித்தனமா இருந்தாச் சொல்லுங்கோ 23.9.81 இதழை நீங்கதான் தயாரிக்கப் போறதா அறிவிச்சுடறேன். அது சரி! 'ஒரு பிஞ்சுக் கத்தரிக்காய் பாவாடையைக் களைகிறது' என்ற தலைப்பில் கதை எழுதிக் கொண்டு இருப்பதாகக் கேள்விப் பட்டேன். தலைப்பு ருசியாகவும், சுவாரஸ்ய மாகவும் இருக்கு. சீக்கிரம் அனுப்பிடுங்கோ. நேரமாச்சு. நான் கிளம்பறேன். ஓர் இடத்தில் தங்கக் கூடாது. 'சர்குலேஷன்'தான் என் பாலிஸி. ஆமா! நீங்க அடிக்கடி கிண்டி பக்கம் போறதா காதில் விழுந்தது. ஏதோன்னு பயந்துவிட்டேன். 'அங்கே' இல்லே. ரேசுக் குத்தான்னு கன்ஃபர்ம் ஆச்சு. அப்பாடான்னு இருந்தது. வரட்டுமா?''

''ரைட் சார்... ஹூம்... இரண்டு பேரைப் பார்த்தாச்சு. அடுத்தது... அட அட பாலன் சார்! வாங்க.''

''உபயகுசலோபரி. என் தந்தை அமரர் வாசன் எழுத்தாளர்களுக்குக் கதை கேட்டுத் தனிப்படக் கடிதம் எழுதும் வழக்கம் வைத்துக்கொண்டிருந்தார். நான் நேரேயே போய் அவர்களைப் பார்க்கிறேன். நீங்கள் எல்லாம் இல்லேன்னா பத்திரிகை ஏது? 'அட்டை'யை மையமாக வைத்து, அது ரத்தத்தை உறிஞ்சும் தன்மையை மனித இன இயல்புடன் கம்பேர் செய்து நீங்கள் அனுப்பிய கதை அற்புதம். அடுத்த வாரம் 'அட்டை'ப் படச் சிறப்புச் சிறுகதையாக வருகிறது. சொல்லி விட்டுப் போகலாம்னு வந்தேன். மதன் அருமையாப் படம் போட்டு இருக்கார். இந்தக் கதை பற்றிய விளம்பரம் தியேட்டர்களில் ஸ்லைடாகப் போடுகிறோம். புதுமையா இருக்கட்டுமேன்னுதான். நான் எதிர்பார்க்காமலிருந்தபோதும், உங்க கதையோட 'இது ஏற்கனவே வெளியான கதை அல்ல' என்று கொடுத்த உறுதிமொழியைப் பார்த்து நெகிழ்ந்து போனேன். போய்ட்டு வரேன்!''

''....கேட்டியாடி, பாலன் சார் சொன்னதை. நெக்ஸ்ட் யாரு? அட மிஸ்டர் ராஜேந்திரனா? வாங்கோ!''

''நமஸ்காரம். 'ஜலப் புறு'ங்கற சரித்திரக் கதையை அனுப்பியிருந்தேளே, படித்தேன். பேராசிரியர் கல்கியின் எளிய நடையி

லிருந்து மாறுபட்டு இருந்தாலும், வார்த்தைப் பிரயோகங்களும், சம்பவங்களின் கோர்வையும் பிரமாதம். கதையைப் படித்த நண்பர் ம. ப. சோமசுந்தரம் (சோமு) அவர்கள்கூட சிலாக்யமாகச் சொன்னார்... 'இந்த மாதிரிக் கதைகளை ரசித்து மகிழ, ரசிகமணி டி.கே.சி. இல்லையே என்று வருத்தப்பட்டுக் கொண்டார்.

''வாசகர்களுக்கு ஒரு போட்டி வைத்திருக்கிறோம். இந்தக் கதையில் மொத்தம் எத்தனை சின்ன 'ர', எத்தனை பெரிய 'ற' வருகிறது என்று எண்ணி, போஸ்ட் கார்டின் ஒரு பக்கத்திலும், கதையில் வேண்டுமென்றே செய்யப்பட்ட ஏழு பிழைகள் என்னென்ன என்பதை மறு பக்கத்திலும் சரியாகக் குறிப்பிட்டு எழுதினால், ரூ. 500 பரிசு என்று அறிவிக்கப் போகிறோம். ஆமாம்? அடுத்த கதை எப்போ அனுப்பப் போறேள். காத்துக் கொண்டு இருக்கோம்.''

''அனுப்பறேன்... அட....அட.... எஸ்.ஏ.பியா வருகிறார். நம்பவே முடியலையே!''

''சின்மயா லெக்சருக்குப் போயிண்டு இருக்கேன். நீங்க கோபமா இருந்ததை பாலு பார்த்ததாச் சொன்னார். ''பாப்பா'' என்கிற உங்கள் கதையின் தலைப்பை, ''ஜாதிகள் இல்லையடி பாப்பா''னு விரிவாக மாற்றியதற்காக விஷயம் தெரிந்த நீங்களே கோபப்படலாமா? பாருங்க. இந்த வாரக் குமுதத்தில்கூட அமெரிக்க கன்ஸ்யூமர் மூவ்மெண்ட் முன்னோடி ரால்ஃப் நாடர் பற்றிய கட்டுரையின் தலைப்பில், 'நாடர்' என்பது 'நாடார்'னு தப்பா அச்சாயிடுத்து. அத்தனை ஃபாரங்களையும் கிழிச்சுப் போட்டோம். வம்பே வேண்டாம்னு. அட என்ன திடீர்னு இருட்டாயிடுத்து?''

''ஆமாம்! சே! எஸ். ஏ. பி.யோட பேசிண்டிருக்கும்போது யாரு விளக்கை அணைச்சது? லைட்ஸ் ஆன்! லைட்ஸ் ஆன்!''



குடந்தை அரசினர் ஆண்கள் கல்லூரியில் சமீபத்தில் எம்.ஏ. (M.A.) முதலாண்டு தேர்வு நடந்தது. இதில் ஒருவர் 'பிட்' அடித்து மாட்டிக்கொண்டு வெளியேற்றப் பட்டார். இதில் என்ன விசேஷம்? 'பிட்' அடித்து மாட்டிக் கொண்டவர் ஒரு தலைமை ஆசிரியர்!

ஆதாரம்: தினமலர்
தகவல்: கிருத்திகா

---

''எழுந்திருங்கோ! எழுந்திருங்கோ! ஏன் 'லைட்ஸ் ஆன்'னு கத்தறேள்?''

''என்ன, நீயா? சே! எங்கேடி எஸ்.ஏ.பி.? இங்கே இருந்தாரே? மணியன், சாவி, பாலன், ராஜேந்திரனெல்லாம் இங்கே வரலியா?''

''என்ன பிதற்றல்? பகலிலேயே கனவா? அவங்களெல்லாம் இங்கே எங்க வரப் போறாங்க? இன்னிக்கு அவங்க திருப்பி அனுப்பின உங்க கதைகள்தான் வந்தது கட்டுக் கட்டாய். மூஞ்சியை அலம்பிண்டு காப்பி குடிக்க வாங்க!''




# ஐந்து எடிட்டர்களும்









• பொண்ணு பாக்கிறேன்!.. பந்தயக் குதிரை மாதிரி...

• நம்ம ஜாக்கி ஜலீலுடைய பொண்ணுப்பா!





# கிண்டியா? கிண்டலா?



பொண்ணு குதிர் மாதிரி வளர்ந்துட்டா! நீங்க அவ ஜாதகத்தைத் தொடாம குதிரைங்க ஜாதகத்தையே மேய்ஞ்சுண்டு இருங்கோ!





எனக்கு மூட் இருக்கறச்சே நான் சொல்ற ரேஸ் டிப்ஸை நோட் பண்ணிக்கோங்க!


கமான் பஜ கோவிந்தம்..
பஜ கோவிந்தம்..
பஜ கோவிந்தம்!
கமான் பஜ கோவிந்தம்




சினிமா ஸ்டாரோட குதிரை!..
போட்டோ என்றதும் போஸ்
கொடுத்து நின்னுடுச்சே!




எந்தக் குதிரை மேலே
ஆடலாம்?
கஸ்மாலம்!.. தண்ணியிலே
ஆடறதுக்கே சரியா
இருக்கு!


மாப்பிள்ளே ஜாக்கி
ஆச்சே! அதான்
இப்படி வம்பாப் போச்சு!


• என்னப்பாது? குர்தை மேலேயே
ஒக்காந்துகிட்டு ஓட்றே?
• இது ரேஸ்லே ஓடின குதிரைங்க..
குர்தை மேலே ஒக்காந்து ஓட்டுனா
தான் போவும்!




## 4

சரியாக 1.50க்கு 'மகேஷ் அண்ட் நடேஷ்' ஆபீஸ் முன்னால் ஒரு டாக்ஸி வந்து நின்றது.

அதிலிருந்து கொட்டையாக, வழுக்கையாக, கோல்ட் பிரேம் கண்ணாடியுடன் ஒரு ஆசாமி இறங்கிக்கொண்டான்.

இறங்கின இடத்துக்கு நேராக, கல்லாவில் உட்கார்ந்திருந்த 'நாரிபவன்' ஹோட்டல் முதலாளி, ''வாங்கோ, நடேஷ் சார் — எப்ப வந்தாப்பலே'' என்று வரவேற்றார்.

''இதோ இப்பத்தான் வந்துகிட்டே இருக்கேன்'' என்றான் நடேஷ்.

''தஞ்சாவூர்போயிருந்திங்க போலிருக்கு.''

''அட, கல்லா துப்பறிஞ்சு வைச்சிருக்கீங்களே!'' — சிரித்தான்.

''மேலே இரண்டு பக்கா டிடெக்டிவ்களை வைச்சுக்கிட்டிருக்கேனே — காத்தாவது மேலே அடிக்காதா?'' — சிரித்தார் முதலாளி.

''எங்க காத்து உங்களுக்கு அடிச்சிருக்கும். ஆனா உங்க கடை காப்பி மணம் மேலேவரை ஒரு நாள்கூட அடிக்க மாட்டேங்குதே!''

ஹோட்டலார் சிரித்தார். நடேஷ் மேலே ஏறிச் சென்று காலிங் பெல்லை அழுத்தினான். பதில் இல்லை. ஆகவே பாக்கெட்டிலிருந்து சாவியை எடுத்துக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே போனான்.

'என்ன இன்னிக்கு யாருமே ஆபீஸ் வரவில்லையா?' — திகைத்தான். சோபாவில் மகேஷின் விரித்த நாவல் கிடந்தது. ஓ. மகேஷ் வந்திருக்கிறான்! வேறே யார் இங்கே அகதா கிறிஸ்டியைப் படிப்பாங்க!

திரும்பினான். நீலாவின் மேஜைகாலியாகக் கிடந்தது. அவள் 'ஸிப்' பண்ணிவிட்டுப் போன கண்ணாடி டம்ளரில் தண்ணீர் இருந்தது. ஓ—நீலாவும் வந்திருக்கிறாள்!

மகேஷின் அறைக்குள் போய் அவன் நாற்காலியில் உட்கார்ந்தான். நீலா அங்கே வைத்திருந்த டிபன் பாக்ஸ் கண்ணில் பட்டது. 'அட, நீலாவோட டிபன் பாக்ஸ்!'

திறந்தான். போளியும் வடையும் சிரித்தன. 'அட, போளி, வடை! லக்கி — வெரி லக்கி — டிபன் பாக்ஸை நகர்த்துகையில் அடியிலிருந்த சின்னத் துண்டுக் கடிதம் கண்ணில் பட்டது. எடுத்துப் பார்த்தான்.

'ஓ! பெர்த் டே ஸ்வீட்ஸ் — எத்தனை ஆசையாகக் கொண்டு வந்து வைத்திருக்கிறாள்! இந்த ஸ்டுபிட், மகேஷ் — ஜோராக அவளைக் கிட்ட வைத்துக் கொண்டு ரசித்துத் தின்னாமல் எங்கே போய்விட்டான்—

மேஜை மீது கால்களைத் தூக்கிப்போட்டுக் கொண்டான். ஒரு போளியை எடுத்து விண்டு வாயில் போட்டுக் கொண்டான்.

அதே சமயம்—

அந்தக் கட்டடத்துக்குச் சற்றுத் தூரத்தில் சிவப்பு நிற சர்க்கார் பஸ் ஒன்று வந்து சத்தமின்றி நின்றது.

கையிலிருந்த டிக்கெட்டைக் கசக்கி விட்டெறிந்துவிட்டுக் குஷியாக ஒரு ட்யூனை 'ஹம்' பண்ணிக் கொண்டு பஸ்ஸிலிருந்து இறங்கினான் மகேஷ்.

வெயில் தாளமுடியவில்லை. எதாவது ஜில்லென்று குடிக்க வேண்டும் போலிருந்தது. பக்கத்திலேயே ஒரு 'ஸாஃப்ட் பார்' இருந்தது.

உள்ளே நுழைந்து கோட் பையில் கையை விட்டு, கிடைத்த ரூபாய் நோட்டைக் கவுண்டரில் வீசி டோக்கன் கேட்டபோது—

''என்ன ஸார் வெத்துக் காகிதத்தைப் போடறீங்க'' என்றான் ஆள்.

திடுக்கிட்டுப் பார்த்தான். ஒரு சின்னக் கடிதம் அது. அதை 'டக்'கென்று எடுத்துக் கொண்டு, இன்னொரு பாக்கெட்டிலிருந்து ரூபாயைக் கொடுத்தான். டோக்கனுடன் உள்ளே போனான்.

என்ன கடிதாசு? எப்படி வந்தது? — அலட்சியமாகப் பிரித்தான். அடுத்த கணம் திடுக்கிட்டான். அதில் ஒரு அழகான பெண் கையெழுத்தில்—

''அன்பே! நான் உன்னைக் காதலிக்கிறேன். உன்னை நினைந்து உருகிக் கொண்டே இருக்கிறேன். என் குரல் உன் காதில் விழவில்லையா? என் காதல் கீதம் உனக்குக் கேட்கவில்லையா? நான் சிறுகச் சிறுக மடிந்துபோக வேண்டியது தானா—''

யார் எழுதினது? எப்படி என் கோட்டில் வந்தது? எழுத்து எங்கோ பார்த்த மாதிரி கண்ணாமூச்சி ஆடுகிறது. யார் நீ?—

நிச்சயமாக மஞ்சு இல்லை. யார் என்னை காதலிக்கிறார்கள் இவ்வளவு 'ஆழமாய்?

அடுத்த வரிகளுக்குப் போனான்.

''என் மரணத்தில் நீ உண்மையைக் காண்பாய். என் உடல் மீது இரு சொட்டுக் கண்ணீர் விட்டாயானால்கூட போதும். என் கல்லறையில் இரண்டு பூக்களையாவது கட்டாயம் வை. நான் உன் அருகிலேயே எப்போதும் இருக்கிறேன். என்னைத் தெரிந்து கொள்ளாதது ஏன்?''

கடிதத்தை மடித்துப் பையில் போட்டுக் கொண்டான். வெயிட்டர் கொண்டு வந்து வைத்த டிரிங்கை உறிஞ்சினான். 'நான் உன் அருகிலேயே இருக்கிறேன்' என்ற வரிகள் காதடியில் திரும்பத் திரும்பப் புலம்பின.— ஏய், யார் நீ?

சட்டென்று ஏதோ நினைவு வந்து டம்ளரை கீழே வைத்துவிட்டு, கடிதத்தை அவசரமாகத் தேடி எடுத்துப் பார்த்தான்.

'நான் உன் அருகிலேயே இருக்கிறேன்' என்ற வரிகளில் அந்த 'ந'வுக்கு முன்னால் ஒரு O வட்டம் இருந்தது. காலண்டரில் பௌர்ணமிக்கு அடையாளமாகப் போடுவார்களே, அந்த மாதிரி வட்டம்.... பௌர்ணமி வட்டம்... ஓ, பௌர்ணமி அன்று நிலா வட்டவடிவமாக...ஓ. நீலாவா இதை எழுதினது?...

இதுநாள்வரை புரியாத ஒன்று புரிந்தது போலிருந்தது. நீலா விட்ட பெருமூச்சுக்கள்.. சோக முகங்கள்... புருவ உருகல்கள்...



நீலாவை உடனே பார்க்க வேண்டும் போலிருந்தது. 'ஹாய் நீலு' என்று கூவி அவள் இடையைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் எனத் துடித்தான்.

படிகளில் வேகமாக ஏறிப் போனான். 'ஹாய்' என்று கூவிக்கொண்டே கதவைத் திறந்து உள்ளே பிரவேசித்தபோது—

திடுக்கிட்டான். நீலா இல்லை. நடேஷ் தான் சாவகாசமாக உட்கார்ந்து கொண்டு போளியைப் பிட்டு வாயில் போட்டுக் கொண்டிருந்தான்.

''ஹலோ, மகேஷ்!'' கூவினான் நடேஷ்.

''நீயா?'' — திகைத்தான்.

''வா, அப்பா, வா — இன்னும் பத்து நிமிஷம் கழித்து வந்திருந்தாயோ உனக்கு வைத்திருந்த பர்த்டே ஸ்வீட்ஸ் அத்தனையும் என் வயிற்றுக்குள் போயிருக்கும். நல்ல வேளை பாதி மிச்சம் இருக்கிறது.''

''எப்ப வந்தே நடேஷ் — நீலா இல்லையா?''

''நான் வந்து டென் மினிட்ஸ் ஆகிறது! நான் வரும்போது இங்கே யாரும் இல்லை. என்னிடமிருந்த சாவியால் திறந்து கொண்டு உள்ளே வந்தேன் .. என்ன முழிக்கிறே... நான் ஒண்ணும் எல்லாத்தையும் தின்னுடலை. இந்தா—''

''பரவாயில்லே நடேஷ் .' நான் இப்பத்தான் சென்ட்ரலில் லஞ்ச். பண்ணிவிட்டு, மாமியாரை டாக்சி ஏற்றி அனுப்பிவிட்டு வரேன். பசியே இல்லே....''

''ரொம்ப நன்றாக இருக்கிறது... முழுக்க நானே தின்றுவிட்டால் நீலா வந்து என்னைக் கொன்று போட்டுவிடுவாள். 'அன்புள்ளவருக்கு' வைத்துவிட்டுப் போயிருக்கிறாளாக்கும்' (சிரித்தான்) எத்தனை ஆசையாகக் கொண்டு வந்தாளோ?...''

மகேஷ் சிலிர்த்தான். ஓ. நீல்! அதுதான் 'எப்ப வருவீங்க'ன்னு கேட்டியா? இரண்டு பேரும் சேர்ந்து தின்னலாம்னு ஆசைப் பட்டாயா?

ஒரு விள்ளல் எடுத்து வாயில் போட்டுக் கொண்டான். 'டிபனை உன் மேஜை மீது வைத்துவிட்டுப் போனவள் எங்கே போயிருக்கிறாள் என்று ஒரு வரி எழுதி வைக்க வேண்டாம்? — ஃபூலிஷ் கேர்ள்'' என்றான் நடேஷ்.

''எங்கே போனாலும் எழுதி வைக்காமல் போக மாட்டாளே!'' — மகேஷ்.

''ஒருவேளை பக்கத்தில்தான் எங்கேயாவது போயிருப்பாள் — வந்துவிடுவாள்'' என்றான் நடேஷ்.

''நீ போன காரியம் என்ன ஆச்சு?''— மகேஷ் கேட்டான்.

''நாமம்; பட்டை நாமம். அப்பா இப்போ பைசா பெயராது என்று சொல்லிவிட்டார். பில்டிங் ஓனர் ரொம்ப நெருக்குகிறானே?''

மகேஷ் ஒரு கத்தை நோட்டுக்களை எடுத்துப் போட, நடேஷ் அதை 'ஹய்யா' என்று





# வாடகை வீடு

தூங்கும் முன் ஒருத்தருக்கொருத்தர் கதை சொல்லிக்கிறது குழந்தைகளின் வழக்கம். இதில் கௌரியும் (சத்யகலா) ரங்கனும் (விஜயன்) கதை சொல்கிறார்கள். ஆனால் தூங்குவது முதலில் நாம்தான்!

குலம்வழி வந்த விபசாரத் தொழிலில் இருந்து தன்னை மீட்டு, தானே மணந்து, இழித்துப் பேசியவனைக் கொன்று ஜெயிலுக்குப் போன தன் மகாபுருஷனைப் (சுமன்) பற்றிச்சொல்லப் பதிலுக்கு ரங்கனும் சினிமா-மோகம்பிடித்து ஓடிப்போய்ச் சீரழிந்த தன் மனைவி (ரீனு)யின் கதையைச் சொல்கிறான். இணையிழந்த இருவரும் சவுகரியமாய் அண்ணா — தங்கை என்று பாசம் கொள்கிறார்கள். சகோதர உறவுமுறை, சினிமாவில்சாதாரணமாய் வருவதைப் பொறுத்துக்கொண்டாலும், 'பிறந்ததே உனக்காகத்தான்' என்பதுபோல அவர்கள் தியாகம்செய்யபோட்டியிடுகையில்எங்கோ கீறிவிட்டதுபோல் எரிச்சல்வருகிறது.

இதே துரை டைரக்ஷனில் இதே விஜயன் — சத்யகலா இருவரும் இதே குடிசையில் அழுதது, ஆவேசித்தது என்ற எல்லாவகை ரசங்களையும் 'தனிமரத்'திலேயே பார்த்துச் சகித்தாகிவிட்டது. 'மறுபடியுமா?

மனோகரின் சிறப்பான ஒளிப் பதிவு படத்துக்குப் பயன்படவில்லை. நான்கு பாடல்களும் நான்கு ரகம். கேட்க முடிகிறது.

பழைய சி.டி. ராஜகாந்தம்தான அசத்துகிறார். 'சின்ன வீட்டு' விவகாரங்களைப் பச்சையாய்ப் பேசுகிறார். கேட்க முடியவில்லை. வசனம் (கதையும்தான்) எழுதிய தூயவன் 'பத்தினி'களில் வகைவேறு பிரிக்கிறார்.

விபச்சாரியின் கதை என்பதால் 'சின்ன வீடு' என்பதற்குப் பதிலாக 'வாடகை வீடு' என்று கொஞ்சம் அழகாகப் பெயர் வைத்திருக்கிறார்கள் என்று நகைப்பவர்களை நெற்றிப் பொட்டில் அடிக்கிறது, கடைசியில் ''ஆத்மாவுக்கு உடல் என்பது வெறும் வாடகை வீடுதான்'' என்று விழும் கார்ட். பார்த்தாலே தெரியுது, ரீனு. அப்புறம் அதுக்கு லேபிள் வேறயா?

க்ளைமேக்ஸ் நியதிகளின்படி யாராவது சாக வேண்டும் என்பதற்காக முடிவில் ரங்கன் சாகிறான். எதுக்கு? சும்மாதான்.

—'சிந்து-ஜீவா'

காட்ச் பிடித்துக் கொண்டு ''ஏது இது?'' என்றான்.

''காலேல ஒரு கேஸ் வந்தது. ஒரு பிலிம் ஆசாமி. யாருக்கோ மதுரையில் பெரிய தொகை கொடுக்கக் கொண்டு போகிறார். வழியில் யாராவது அபேஸ் பண்ணிவிடக் கூடாதே என்று பயப்படுகிறார். மப்டியில் கூட வரச் சொல்கிறார்.''

''ப்பூ! இவ்வளவுதானே? போய்விட்டு வந்துவிடு.''

''இதில இன்னொரு பார்ட்டியும் இருக்கிறது. ஒரு பெண்பிள்ளை டெலிபோனில் கூப்பிட்டு, கூடப் போகாதே என்கிறாள். அவன் தன் மனைவியைக் கொலை செய்துவிட்டு உன்னோடு ரயிலில் இருந்ததாக 'ப்ரூவ்' பண்ணப் போகிறான்' என்கிறாள்.''

''கவலைப்படாதே. அவனை நான் பார்த்துக் கொள்கிறேன்.'' என்றான் நடேஷ். பணத்தை எடுத்து மேஜை டிராயரில் வைத்துப் பூட்டினான்.

'ட்ரிங்....ட்ரிங்....'

''அவளாகத்தான் இருக்கும்.'' கூவினான் நடேஷ். மகேஷ் போனை எடுத்தான்.

''மிஸ்டர் மகேஷ்?''

''எஸ், மகேஷ் ஹியர்.''

''மிஸ்டர், உன் செகரட்டரி பொண்ணு இனி திரும்பி—வரமாட்டா. அவளைத் தேட வேண்டாம்'' என்றது குரல். ஆண் குரல்தான்.

மகேஷ் திடுக்கிட்டான். ''என்ன சொல்றே'' —பதறினான்.

''புரியலே? தமிழ்லதானே சொன்னேன். லட்டு மாதிரி ஒரு குட்டியை செகரட்டரியா வச்சுக்கிட்டிருந்தியே — அவ இனிமே உன் ஆபீசுக்குத் திரும்பி வரமாட்டாள், என்கிறேன் — புரியலே?''

''ஏன் வரமாட்டாள்?'' — ஆத்திரத்துடன் கேட்டான் மகேஷ்.

''நாளை மத்தியானம் இங்கே இருந்து ஒரு மூடின 'டிரக்' புறப்படுகிறது. அதிலே அவளைக் கொண்டு போகப் போறாங்க.''

''எதுக்கு, எங்கே?''

''எதுக்கா? ஒரு கன்னிப் பொண்ணை எதுக்காகக் கொண்டு போவாங்க? — பலி கொடுக்கத்தான்—'' குரல்காரன் ஹாஹ்ஹா' என்று சிரித்தான். ''புரிகிறதா மிஸ்டர். வடக்கே ரொம்ப தூரத்திலே ஒரு மலையிலே ஒரு கோயில் கோபுரம் இடிஞ்சு இடிஞ்சு விழுகுதாம். கன்னி பலி கொடுத்தா நின்னுடும்னு சோசியர் சொல்றாராம். உன் செகரட்டரியை அதுக்காகப் பிடிச்சிருக்காங்க.''

''நோ'' என்று கத்தினான் மகேஷ். பிறகு, ''மாட்டேன். அவளை அவர்கள் கொண்டு செல்ல விடமாட்டேன்... நிச்சயமாக மாட்டேன்'' என்றான்.

''உன்னால ஒரு துரும்பைக் கூட அசைக்க முடியாது பிரதர்... உன் பேரழகி இப்போது மயக்க மாத்திரை தின்று ஜோராக ஒரு பெட்டிக்குள்ளே தூங்கிக் கொண்டிருக்கா. அவள் இருக்கும் இடத்தைச் சுற்றி அரை மைல் விஸ்தீரணத்துக்கு ஈ காக்கை கிடையாது. காலைவரை தூங்குவாள். காலையில் ஒரு டிரக் வரும். வந்து அவளைத் தூக்கிப் போட்டுக் கொண்டு போய்விடும்.''

''நீ யார்? உனக்கு இது எப்படித் தெரியும்?''

''அது உனக்கு அவசியமில்லை.''

''எங்கே இருந்து பேசுகிறாய்?''

''நான் என்ன முட்டாளா — அதைச் சொல்ல?—'' சிரித்தான் அந்த ஆள். ''நீதான் பெரிய ஷெர்லாக் ஹோம்ஸ் ஆச்சே கண்டு பிடியேன்— பார்க்கலாம்!''

## உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...






செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. 6. TM

''நிச்சயம் கண்டு பிடிக்கத்தான் போகிறேன். யூ ராஸ்கல்!''

''ஒரு 'க்ளூ' கொடுக்கட்டுமா ஸையா—'' ஆள் கேட்டான்., ஏகத்தாளமாக. ''அவளைக் கூட்டிக்கிட்டுப் போயிருக்கிறவ நீலப் புடவை கட்டியிருக்கிறா. முகத்திலே அம்மைத் தழும்பு இருக்கும் வடநாட்டு முகம். மராட்டி பேசுவாள்.''

''எப்படி அழைத்துப் போனாள்?''

''ரொம்ப சுலபமாக.'' சிரித்தான். ''நீ எங்கே இருந்தோ பேசின மாதிரி நான்தான் பேசினேன். அவளை உடனே புறப்பட்டு ஒரு குறிப்பிட்ட இடத்துக்கு வரச் சொன்னேன். அங்கே அந்த மராட்டிக்காரியிடம் ஒப்படைத்து விட்டுச் சுளையாக இரண்டாயிரம் வாங்கிக்கொண்டு வந்து விட்டேன்.''

''நான் நாலாயிரம் ரூபாய் தருகிறேன். அவள் இருக்குமிடத்தைச் சொல்லு.''

''ஐயையோ! நான் மாட்டேன். எனக்கு இரண்டாயிரமே போதும். அப்புறம் அவளைக் கொண்டுவரச் சொன்ன காளி மாதா கோபித்துக்கொள்வாள்.''

''மிஸ்டர்!'' — கத்தினான் மகேஷ்.

''சீக்கிரமாகச் சொல், எனக்கு நேரமாகிறது.''

''இவ்வளவு செய்த நீ எதற்காக என்னிடமே அதைச் சொல்கிறாய்?''

''அந்தப் பெண்ணை நான் ஆசைப் பட்டேன் மிஸ்டர். உன் பட்னிமால் மூஞ்சிதான் ஜோராக இருக்கிறதென்று அவள் சொல்லி விட்டாள். உன் அழகான 'லவ்'விக்கு எப்படிப்பட்ட தண்டனை கிடைக்கப் போகிறது உனக்குத் தெரிய வேண்டாமா... அதற்காகத்தான்... இன்றைக்கு நாலாம் நாள் வெள்ளிக் கிழமை, காலை நாலு மணிக்கு அவளை அந்தக் கிராமக் கோயிலில் வெட்டிப் பலிகொடுத்து விடுவார்கள்.''

'டக்'கென்று வைத்து விட்டுப் போய் விட்டான்.

மகேஷ் இடிந்து போய் உட்கார்ந்துவிட்டான். அவன் கண்களிலிருந்து நீர் ஆறாகப் பெருகியது. ''நீலா... நீலா...'' என்று அரற்றினான். (தொடரும்.



அருள்வாக்கு

## தருமங்களில் பாகுபாடு

சமுதாய வாழ்வுக்குப் பல காரியங்கள் நடந்தாக வேண்டியிருக்கிறது. புத்தியினால் செய்கிற காரியங்கள், சரீரத்தால் செய்கிற காரியங்கள் இவற்றில் பல பல தினுசுகள். இத்தனையும் ஜன சமூகம் சுபிட்சமாக இருப்பதற்கு அவசியமாக இருக்கின்றன. இதில் ஒரு தொழில் உயர்வு, ஒரு தொழில் தாழ்வு என்று நினைத்தால் அது சுத்த தப்பு.

நம் குடும்பம் ஒவ்வொன்றுக்கும் அரிசி வேண்டும், உப்பு வேண்டும், துணி வேண்டும், புத்தகம் வேண்டும், இன்னும் எத்தனையோ வேண்டும். — அதற்காக நாம் ஒவ்வொருவரும் தானியங்கள் பயிரிட்டுக் கொண்டும் உப்புக் காய்ச்சிக் கொண்டும், துணி நெய்து கொண்டும் இருக்க முடியுமா? உழுகிறவன் தனக்காக மட்டுமில்லாமல் எல்லாருக்காகவும் விளைவிக்கிறான். துணி நெய்கிறவன் எல்லாருக்காகவும் நெய்கிறான். இப்படியே சமுதாயம் முழுவதற்குமாகச் சிலர் வியாபாரம் செய்கிறார்கள், சிலர் யுத்தம் செய்கிறார்கள். இப்படியே உலகம் முழுவதற்கும் ஆத்ம க்ஷேமம் ஏற்படச் சிலர் தியானமும் பூஜையும் யாகமும் செய்து கொண்டு, லோகோபகாரமான சாஸ்திரங்களை ரக்ஷித்து வரவேண்டும். இப்படி பரஸ்பர பிரயோஜனத்துடன் ஜனங்கள் பல தொழில்களைப் பங்கீடு செய்து கொண்டு சௌஜன்யமாக வாழ நம் தர்ம சாஸ்திரங்கள் அழகாக வழி வகுத்திருக்கின்றன.

எந்தத் தொழிலானாலும் சரி. அதைப் பரமேசுவரன் விதித்த ஆக்ஞையாக 'லோக க்ஷேமார்த்தம் செய்கிறேன்' என்று உணர்ந்து செய்தால் அதுவே ஒருத்தனுக்கு ஆத்ம க்ஷேமார்த்தமாகவும் ஆகிறது.

ஒவ்வொரு காரியத்தில் ஈடுபட்டுள்ள ஜீவனும் கடைத்தேறுவதற்கு அநுகூலமாக வெவ்வேறு அநுஷ்டானங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. உடல் வருந்த உழைக்கிறவனை உபவாசம் இரு என்றால் அவனால் முடியுமா? புத்தியினால் காரியங்களைச் செய்கிறவர்களுக்கு சரீர போஷணம் அவ்வளவு அவசியமில்லை. அவர்கள் சரீராபிமானம் நீங்கவே அதிக அநுஷ்டானங்கள் வைத்திருக்கிறது. காரியங்களைப் பொறுத்தே அநுஷ்டானங்கள் இருக்கின்றன என்று புரிந்து கொண்டால் சண்டைக்கு இடமே இல்லை.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

# தலை குனிவு

ருக்மிணி பார்த்தசாரதி

வீட்டை விட்டுக் கிளம்பும் போதே நேரமாகி விட்டது. "இன்று கட்டாயம் கிளாஸுக்கு லேட் தான்!" என்று நினைத்துக் கொண்டே பள்ளிக்கு விரைந்த கணேஷ், நான்கு தெருக்கள் இணையும் இடத்துக்கு வந்ததும் சற்றுத் தயங்கினான். வலது பக்கம் செல்லும் தெரு அவன் பள்ளிக்குக் குறுக்கு வழி. "இதில் நுழையலாமா?" என்று எண்ணியவன் அத்தெருவில் வரிசையாக இருந்த கடைகளைச் சட்டென்று நோட்டம் விட்டான். மூன்றாவது கடை ஆறுமுகத்தினுடைய பழக் கடை. "ஆறுமுகம் இல்லாவிட்டால் ஜிட்டாக இந்தத் தெரு வழியே ஓடிவிடலாம்!" என்று நினைத்தவன் ஏமாந்து போனான். ஆறுமுகம் நிதானமாக ஆப்பிள் பழங்களை ஒரு பழைய துணியால் துடைத்துக் கொண்டிருந்தாலும் தன் கழுகுக் கண்களால் தெருவில் போவோர் வருவோரையும் கவனித்தவாறிருந்தான். அவன் பார்வையிலிருந்து தப்புவது துர்லபம்.

வேறு வழியின்றி கணேஷ் இடது புறம் திரும்பி நடக்கலானான். "பரவாயில்லை... முதல் பீரியட் ஸயன்ஸ்தான். ஸயன்ஸ் மாஸ்டர் பிரம்படி தரமாட்டார்!" என்று திருப்திப்பட்டுக் கொண்டான். மனத்தில் ஒரு மூலையில் தன் தந்தையின் மேல் கோபம் பொங்கிற்று. "எந்தக் காரணத்தை முன்னிட்டும் ஆறுமுகம் கடை வைத்திருக்கும் தெருவில் கால் வைக்காதே! அவன் உன்னை நிறுத்துவான். எனக்குத் தலை குனிவாய்ப் போய்விடும்!" என்று அவர் கண்டிப்பாய்க் கட்டளையிட்டிருந்தார்.

இந்த அதிசயக் கட்டளையை நினைத்து கணேஷ் எத்தனையோ தடவை குழம்பியிருக்கிறான். ஆறுமுகத்திடம் அவன் தந்தைக்கு என்ன பயம்? பயம்தானா? ஆறுமுகம் சொந்தமாகக் கடை வைத்திருக்கும் ஒரு கௌரவமான மனிதன். ஏமாந்தவர்கள் தலையில் அழுகல் பழங்களைக் கட்டாத நாணயஸ்தன். அவனிடம் எதற்காகப் பயப்படவேண்டும்? ஒருவேளை ஆறுமுகம் அவன் தந்தைக்கு ஏதாவது உதவி செய்து, அவர் அந்தக் கடனை அடைக்காமல் இருந்திருப்பாரோ? இதுவும் அவ்வளவாகச் சாத்தியமில்லை. அவன் தந்தை அரசாங்கத்தில் உயர்ந்த அதிகாரி. வசதியானவர். பின் அவருடைய விநோதக் கட்டளைக்குக் காரணம் என்ன? இருவருக்குமிடையே சுமுகமான உறவு இருந்து வருவதையும் கணேஷ் அறிவான். இருவரும் சகோதரர்கள் போலப் பேசிச் சிரித்து மகிழ்வார்கள்.

அப்படியிருக்க, அந்தக் கட்டளை எத்தனை பைத்தியக்காரத்தனமானது!

ஒரு நாள் அவனை அவன் தந்தை 'மாஜிக் ஷோ' ஒன்றுக்குக் கூட்டிச் சென்றார். காலி பாத்திரத்திலிருந்து கங்கை நீர் வரவழைப்பது, இளம் பெண்ணை இரண்டு துண்டாக அறுத்துப் பின் மந்திரம் போட்டு இணைப்பது, நான்கு துணிகளால் கண்களைக் கட்டிக் கொண்டு சீட்டுக் கட்டின் அத்தனை சீட்டுக்களையும் சரியாகச் சொல்வதுமாகச் சக்கைப் போடு போட்டு விட்டார் மந்திரவாதி. கணேஷ் அப்படியே அயர்ந்து போய்விட்டான். ஷோ முடிந்து வீடு திரும்ப தந்தையும் மகனும் பஸ் பிடித்தபோது, கணேஷ், "உலகத்திலேயே இவர்தான் பெரிய மந்திரவாதி!" என்று குழந்தைத் தன்மையாகச் சொன்னான்.

"பூ! இவர் ஒன்றுமே இல்லை! நான் உன் வயசாயிருந்தபோது, என் அப்பாவோடு ஒரு மாஜிக் ஷோ பார்த்தேன். அதுவல்லவா மாஜிக் ஷோ!" என்றவர், அந்த ஷோவைப் பற்றிய வர்ணனையில் மூழ்கிப் போனார்.

'சொல்லிவிடலாமா?' என்று ஒரு கணம் யோசித்தான், கணேஷ். ஆனால் உடனேயே தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டான். அவர் இட்ட கட்டளையை அவரே மீறி நடக்கிறார். என்னதான் ஆகிறதென்று பார்க்கலாமே! வெகு நாட்களாக அவனைக் குழப்பிக் கொண்டிருந்த கேள்விக்கு விடை கிடைத்துவிடும்!

ஆறுமுகத்தின் கடையை நெருங்கிய பின்தான் அவர் சுய உணர்வு பெற்றார். ஆறுமுகமும் அவரைக் கண்டு விட்டான்.

லபக்கென்று ஒரே தாவலில் வீதியில் இறங்கி அவருக்கு அருகே வந்து நின்றான் ஆறுமுகம்.

"நான் செய்த அதிர்ஷ்டம், நீங்களும் பையனும் வந்தது!" என்றான். முகத்தில், குரலில் இன்பம்.

கணேஷ் தன் தந்தையின் முகத்தைப் பார்த்தான். அதிலும் இன்பம்தான்! பதிலே சொல்லாமல் ஆறுமுகத்தையே வாத்ஸல்யத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார். பின், "கடை எப்படி நடக்கிறது?" என்றார்.

"லாபம்தான்.. எந்தக் குறையும் இல்லை, ஒரே ஒரு குறையைத் தவிர."

"அதென்ன குறை?"

---

**ஏய்?**



எக்ஸ் சோப்பிற்கு
விளம்பரம் கொடுத்த
செக்ஸ் நடிகை
இரண்டு மாதமாய்க்
குளிக்கவே
இல்லையாம்!

-ஸ்ரீ. ஸ்ரீதரன்

''கணேஷுடைய ஸ்கூல் பையன்கள் இந்த வழியே தினம் போறதை நான் பார்க்கிறேன். இவன்மட்டும் கண்ணில் படறதில்லே...''

''நான்தான் அப்படி ஆர்டர் போட்டேன் ஆறுமுகம்!''

''ஏன்?'' அவன் முகத்தில் சோகம் லேசாகப் படர்ந்தது.

''நீ உன் பழைய வழக்கத்தை ஆரம்பித்து விடுவாயோ என்கிற பயம்!''

''மாட்டேன். உங்களுக்குப் பிடிக்காததை நான் செய்ய மாட்டேன். பையன் இந்த வழியாய் ஸ்கூல் போகட்டும்... பார்த்து சந்தோஷப்படறேன்...''

''நிஜமாகவா?''

''நீங்கள் வேணுமானால் பரீட்சை வையுங்களேன்!''

'சரி! ஒரு டஜன் வாழைப் பழம் கொடு!''

ஆறுமுகம் நல்லதாகப் பெரிதாகப் பார்த்து ஒரு டஜன் பழத்தை எடுத்து ஒரு கவருக்குள்இட்டுத் தந்தான். ''இரண்டரை ரூபாய்'' என்று விலையைச் சொல்லிப் பணத்தைப் பெற்றுக் கொண்டான்.

தந்தையும் மகனும் வீடு நோக்கி நடந்தார்கள். ''கணேஷ்! இனிமேல் நீ இந்தத் தெரு வழியே ஸ்கூல் போகலாம். எனக்கு ஆட்சேபணை இல்லே!'' என்றார்.

''அப்பா! இப்போதாவது விவரமாகச் சொல்லக் கூடாதா?''

''சரி, கேள்! சுமார் இருபது வருஷங்களுக்கு முன் என் அப்பாவிடம் ஒரு வயதான தோட்டக்காரன் இருந்தான். ஒரு நாள் அவன் தன் ஆறுவயதுப்பேரனை அழைத்து வந்து, ''இவன் தாய் தந்தை இல்லாத அநாதை... உங்கள் வீட்டில் எடுபிடி வேலைக்கு வைத்துக் கொண்டு அன்பாக நடத்துங்கள்!'' என்று வேண்டிக் கொண்டான். என் தந்தையும் சம்மதித்தார். மறுவருடமே, ஏதோ தன் கடமை முடிந்து விட்டது போல், அந்தத் தோட்டக்காரன் இறந்து போனான்.

எடு பிடி வேலைக்கு வந்த சிறுவனை வீட்டில் ஒருவனாகப் பாவித்தார் என் தந்தை. பள்ளிக்கு அனுப்பிப் படிக்க வைத்தார். எட்டாவதுக்கு மேல் அவன் படிக்க விரும்பவில்லே. அந்தப் பையன்தான் ஆறுமுகம். என்னை விட வயதில் பதினெட்டு வயது இளையவன்; ஆனால் ஒரேவீட்டில் என்னோடுவளர்ந்தவன்.''

கணேஷ் கவனமாகக் கேட்டுக் கொண்டே வந்தான்.

''வருடங்கள் பறந்தன. என் தந்தை இறக்கு முன் தம் உயிலில் ஒரு தொகையை ஆறுமுகத்தின் பெயருக்கு எழுதி வைத்தார். அதைக் கொண்டு அவன் சொந்தமாக வியாபாரம் ஆரம்பிக்க நான் ஏற்பாடு செய்யும்படியாக அன்புக் கட்டளை இட்டிருந்தார். அவருக்குச் செய்யும் அஞ்சலியாக நினைத்து அந்தக் கட்டளையை நான் நிறைவேற்றினேன். ஆறுமுகத்தின் இஷ்டப்படியே பழக் கடை ஆரம்பித்துக் கொடுத்தேன்.

''இந்த உதவியை அவன் மறக்கவேயில்லே. மாதா மாதம் கூடை நிறைய பழங்களை என் வீட்டுக்கு இலவசமாக அனுப்ப அரம்பித்தான். இது எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லே. அவனைக் கூப்பிட்டுக் கண்டித்தேன். அவன் பிறகு, வீட்டுக்குக் கூடைப் பழம் அனுப்பவில்லேயே தவிர, உன் அம்மா இந்தப் பக்கம் வந்தால் பழங்களைத் தந்துவிட்டுப் பணம் வாங்க மறுத்தான். பலன்,



அவனும் அவன் கடையில் பழம் வாங்குவதை நிறுத்திக் கொண்டான். எங்கே உன்னிடமும் இலவசமாகப் பழங்களைக் கொடுத்து என்னைத் தலை குனிய வைப்பானோ என்ற பயத்தில்தான் நான் அப்படி உன்னிடம் கட்டளையிட்டேன்.''

''இதில் தலைகுனிவு என்ன அப்பா?''

''என் தந்தை அவனுக்கு உதவியிருக்கலாம். அது அவருடைய பொன்னான மனசைக் காட்டுகிறது. அவர் பிரதி எதிர்பார்த்து உதவவில்லை. அவன் தன் நன்றியைக் காட்ட விரும்பினால், சிறிதளவு எப்போதாவது விசேஷ நாட்களுக்குப்பழம் தரட்டும். அதில் தவறில்லை. ஆனால் இப்படியா இலவசமாகக் கூடை கூடையாக! இது என்னையும், என் தந்தையின் அன்பையும் அவமானப்படுத்துவதாகாதா? பிரதி எதிர்பாராமல் செய்யப்பட்ட உதவியை களங்கப்படுத்தக் கூடாது கணேஷ்! ஆனால் இப்போது பார்! நான் வாங்கின பழத்துக்கு ஆறுமுகம் சராசரி விலை கேட்டான். பழ வியாபாரம் அவன் ஜீவனம். இதில் இலவசமாகக் கொடுப்பது அவனுக்கு அநீதி. எனக்குத் தலை குனிவு... அவன் வியாபாரம் செழித்து அவன் வசதியோடு வாழ வேண்டுமென்று நான் விரும்ப மாட்டேனா?''

கணேஷ் பதில் சொல்லவில்லை. ஓசியில் பொருள்களைப் பெறுவதையே கெட்டிக்காரத்தனமாக நினைக்கும் மனிதர்களிடையே அவன் தந்தையின் பண்புதான் எத்தனை அழகானது. அபூர்வமானது என்று நினைத்துப் பெருமிதமடைந்தான்.

# அவசரக்காரி

● 'உன்னை ஆசைப் படுகிறேன்' என்று சொன்ன பாவத்துக்குத் தன்னை முச்சந்தியில் நிறுத்திச் செருப்பால் அடித்து அவமானப்படுத்திய ஆர்த்தியைப் பழி வாங்கத் துடிக்கிறான் ராஜேஷ். உடனே செருப்புத் தைக்கும் குப்பனைத் தயார் செய்து அறிவுசால் ஆனந்தாய் மாற்றி, மாயை வலை விரித்து, ஆர்த்தியின் மனம் மானம் எல்லாம் பறித்து வஞ்சம் தீர்க்கிறான். ரொம்பப் புதுமையா இல்லே! குடையால் அடித்திருந்தால் குடை ரிப்பேர் செய்பவரை தயார் செய்திருப்பார் வில்லன்.

படத்தோடு பக்கள் எங்கே தம்மை யறியாமல் ஒன்றிவிடப் போகிறார்களோ என்று பயந்து டைரக்டர் இடை வேளைக்குப் பின் ஒரு குண்டைத் தூக்கிப் போடுகிறார். ஆர்த்தியின் அண்ணன்தான் ராஜேஷ் என்று! அது எப்படி? (பக்கத்து சீட்டுக்காரருக்கே இல்லாத அக்கறை நமக்கேன்?)

அப்புறம் என்ன, அண்ணனுக்குப் பாசம் பிறீடுகிறது; தங்கைக்குக் காதல் மனம் நோகிறது. குப்பன், சாரி ஆனந்த், தேடப்படுகிறான். அவன் விபத்தில் அடிபட்டு நினைவிழந்து, மறுபடியும் ஞாபகம் பெற அவஸ்தையில் நமக்கு எல்லாம் மறந்து போகிறது.

எல்லா புது முகங்களும் 'எதுக்கு வீண் எங்களுக்கு அறிமுகம்' என்று சொல்லும் படி வந்து போகிறார்கள்.

தாரை தப்பட்டையுடன் இனியும் ஆயிரம் பாடல்களை (ஒரே மெட்டில்!) போடசங்கர் கணேஷுக்குச் சாமர்த்தியம் இருக்கலாம்; ஆனால் தாங்கும் சக்தி நமக்கில்லை. மைசூர் முழுவதுமான லொக்கேஷன்களும், வித்யாசமாய்ப் பளிச்சிட்ட விஸ்வம் நடராஜின் ஒளிப்பதிவும்தான் 'பொறுத்துக் கொள்ளுங்கள்' என்று நம்மைத் தேற்றும் அம்சங்கள்.

கடவே என்று கடைசியில் இறந்து போகிறார்கள் அண்ணனும் தங்கையும். படமும்... நிர்கதியில் விடப்படுகிறது. நம்மைப் போலவே.

—சிந்து-ஜீவா



# தே.மா.ப. சுண்டல்!

● 'கடன் அன்பை முறிக்கும்' என்ற அறிவிப்பு எல்லா கடைகளிலும் காணப்படும். ஆனால் தென்காசியில், தவணை முறை விற்பனைக் கடை ஒன்றில் 'கடன் அன்பை வளர்க்கும்' என்ற அறிவிப்பு காணப்படுகிறது.




● எத்தனையோ வகைகளில் அமைந்த கண்ணதாசனின் பாடல்கள் பலவற்றைப் பல இடங்களில் நீங்கள் படித்திருக்கலாம். ஆனால் குற்றாலத்தில் 'பாண்டியன் ஹோட்டல்' உணவைப் பற்றி அவர் பாடியுள்ள பின்வரும் பாடலை குற்றாலம் பேருந்துநிலையத்தின் சுற்றுச் சுவரில் மட்டுமே காண முடியும்.

வேண்டிய வரையில் உண்டேன்
விருந்தினும் சிறக்கக் கண்டேன்.
ஆண்டியும் அரசரேனும்
ஆசையாய் அருந்தக் கண்டேன்
பாண்டியர் குற்றாலத்துப்
பழமலைச் சாரல்நேரம்
பாண்டியன் ஹோட்டல் கண்டால்
பசியென்ன பசியோ அம்மா!

● ● ●

● அண்மையில், இலங்கை வானொலியில் 'விகட நடாகம்' பகுதியில் கேட்ட ஜோக்:

''இந்த நாய்க்குட்டி என்ன விலை?''

''இருநூறு ரூபாய்...''

''கொஞ்சம் குறைக்கக் கூடாதா?''

''உடம்பு எப்படி ஜோர் இருக்கு... குரைக்கிறதுக்கு நான் என்ன நாயா?

● ● ●

● பெர்சனல் மானேஜர் ஒருவர் தம் மகளுக்குத் திருமணம் நடத்தினார். அவரே எதிர்பார்க்காத அளவுக்கு பரிசுப் பொருள்கள் குவிந்தன. இவ்வளவு அதிகமாகப் பரிசுப் பொருட்கள் குவியக் காரணம் என்ன என்பதைப் பற்றி ஆராய்ந்தார் அவர். பின்பு, விரைவில் நடக்கவிருக்கும் நேர்முகத் தேர்வு மூலம் வேலைக்கு ஆள் எடுக்கும் பொறுப்பு தம்மிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளதை முன்விட்டே இப்பரிசுப் பொருட்கள் வந்துள்ளன என்பதை உணர்ந்துகொண்ட அவர், ஓசைப்படாமல் வேறு மாநிலத்துக்கு மாற்றல் வாங்கிச் சென்றுவிட்டார். பரிசு வழங்கியவர்கள் இப்போது ஏன் பரிசளித்தோம் என்று நொந்து கொண்டிருக்கிறார்கள்!



● ஒரு டாக்டருடன் பேசிக்கொண்டிருந்த போது ஓர் இளைஞர் வந்தார். அவரைக் கண்டதும் டாக்டர் ஏற்கனவே எழுதி வைத்திருந்த ஒரு கடிதத்தை நீட்ட இளைஞர் டாக்டரை நோக்கி இருபது ரூபாய் நோட்டை நீட்ட, அதை வேண்டாம் என்று டாக்டர் கூற, ஏ.சி.யில் வைத்தியமா என நான் யோசித்துக் கொண்டிருந்தபோது டாக்டர், கூறினார்: ''இந்த இளைஞன் சென்னையில் இருப்பவன். இவனுக்குப் பார்த்திருக்கும் பெண் ஸ்டேட்ஸில் இருக்கிறாளாம். திருமண நிச்சயத்துக்கு முன்பு இவன் தாம்பத்ய வாழ்வுக்கு ஏற்றவன்தான் என டாக்டரின் சான்றிதழ் வேண்டும் என பெண்ணின் தந்தை கேட்கவே இளைஞன் என்னை நாடி வந்தான். நானும் சோதனைக்குப் பின் இவன் ஏற்றவன் என்று சான்றிதழ் கொடுத்துள்ளேன்...''

கல்யாணத்துக்கு முன்பு ஜோசியரும் புரோகிதரும் தேவைப்படும் அதே வேளையில் இப்போது டாக்டரும் தேவைப்படுகிறார்!

—யெம்ஜி

● ● ●

● மவுண்ட் ரோடில் குடித்துக் கொண்டே இருப்பேன் சினிமா பானரை இருந்துள் நீக்கிவிட்டார்களோ என்னவோ தெரியாது. ஆனால் அது முன்னிலும் இப்போது ரொம்பவும் பொருத்தமாக இருப்பதை ''சுட்டி'' மாத இதழ் சுட்டிக் காட்டுகிறது:

''மது அரக்கனை எதிர்த்து நிற்கும் மாண்புமிகு தமிழக முதல்வரே வாழ்க!''

''எம். ஜி. ஆர். ஆட்சிக்கு வந்த சமயத்தில் வைத்த சினிமா 'பானர்' இது. இன்னும் தொடர்ந்து சென்னை, அண்ணாசாலை, ஆயிரம் விளக்கில் அனைவர் கவனத்தையும் கவர்ந்து கொண்டிருக்கிறது.

இந்தப் படத்தில் 'புரட்சித் தலைவர்' மது அரக்கனை எதிர்க்கிறாரா அல்லது புறமுதுகு காட்டத் தயாராகிறாரா அல்லது தாய்க்குலம் கண்ணீர் வடிப்பதைக் கண்டு ஒதுங்குகிறாரா?

- கா. சீ. ஸ்ரீதரன், பம்மல்.

புகைப்படம்: உத்ரா



# "இதுவரை என் கணவர் எடுத்துள்ள சரியான முடிவுகள் இரண்டே

## ஒன்று: என்னை மணந்தது
## இரண்டு: சாலிடெர் டிவியை வாங்கியது"



" இதுபோன்று கூறி நான் சில சமயங்களில் என் கணவரை கேலி செய்வதுண்டு " என்று, சென்னை, தெற்கு பீச் ரோடு கற்பகம் அவின்யு, 11-ம் நெம்பர் (போன் : 71371) வீட்டில் வசிக்கும் திருமதி கீதா கணபதியை நாங்கள் சந்தித்தபொழுது கூறினர். எங்களது 'வாடிக்கையாளர் சந்திப்பில்' இது ஒரு பகுதி.

சாலிடெர் டிவியை இரண்டு வருடங்களுக்குமுன் வாங்கியதாக கூறினர் திரு. கணபதி அவர்கள். இவ்விரண்டு வருடத்தில் ஒரே ஒரு முறைதான் டிவி பழுதடைந்தது. ஆனல் உடனடியாக சர்வீஸ் என்ஜினியர்கள் பழுது பார்த்து சரிப்படுத்தி விட்டதாக கூறினர்.

சாலிடெர் டிவி வாங்க காரணம் என்ன என திருமதி கீதா கணபதியிடம் வினவிய பொழுது, "வாரத்தில் இரண்டு சினிமா, ஒளியும் ஒலியும், ஒரு டிராமா ஆகியவற்றை தடையின்றி பார்க்கமுடியும். மேலும் பல நண்பர்களிடம் விசாரித்தபொழுது சாலிடெர் டிவியையே வாங்கும்படி சிபாரிசு செய்தனர். ஏன் என்ருல் அது அடிக்கடி பழுதடைவதில்லை"

அதே கேள்வியை திரு. கணபதியிடம் கேட்டபொழுது, " அழகான, செய்தி வாசிப்பவரின் கண் இமைகளை காண்பது எனக்கு மிகவும் பிடிக்கும் " என்று உடனடியாக பதில் வந்தது.

இத்தகைய சந்தோஷமான சந்திப்பிற்கும், சாலிடெர் டிவியை மற்றவர்களுக்கு சிபாரிசு செய்வதற்கும் நன்றி கூறுகிறேம். ஒரு திருப்தி அடைந்த வாடிக்கையாளரை சந்திப்பதிலுள்ள சந்தோஷம் வேறு எதிலும் உள்ளதாக எங்களுக்குத் தோன்றவில்லை.

**TS 62**

10 வாட் ஹைஃபை ஆம்ப்ளிஃபையரும் 20 செ.மீ. டியூயல் கோன் ஸ்பீக்கரும் கொண்டு, ஈடு இணையற்ற ஹைஃபை ஒலியை அளிக்கவல்ல ஒரே டீலக்ஸ் டிவி TS 62. பிரத்யேகமான 'பாஸ்' மற்றும் 'டிரபிள்' கண்ட்ரோல்கள் தனித் தனியாக உள்ளன. இவைகளை இயக்குவதன் மூலம் சீரான ஒலியை பெறலாம். டிவியில் நிகழ்ச்சிகள் இல்லாத நேரத்திலும், டிவி உங்களுக்கு உபயோக முள்ளதாக இருக்க, உங்கள் டேப் ரெக்கார்டர், ரெக்கார்டு பிளேயர் மற்றும் ஏ எம் எஃப் எம் டியூனர் போன்றவற்றை இணைக்க 'பிக்-அப்' வசதிஉண்டு.

இது தவிர மேலும் சாலிடெருக்கே உரித் தான உன்னத அம்சங்களடங்கியது— விஷன் இண்டர்மீடியட் ஃபிரிகுவன்சியில் கண்டுள்ள முன்னேற்றத்தினால் துல்லிய மான படத்தோற்றம், தேவையில்லாத சப்தத்தை நீக்கி படம் மேலும் கீழுமாக ஓடாமலிருக்க பிரத்யேக ஆட்டோமேடிக் சாதனம், மழைக்காலத்தில் 'ஸ்பார்க்' ஏதும் வராமலிருக்க கையாளப்பட்டுள்ள நவீனமுறை மற்றும் வார ஏழு நாட்களிலும் சிறந்த பராமரிப்பு.

## அனுகுவீர் சாலிடெர் வைத்திருப்போரை
## அறிந்திடுவீர் அவர்தம் அனுபவங்களை



# சாலிடர்

HE-334



# இதோ ஒரு சிறு கிராமம்

'வானம் பார்த்த சீமை' என்று ஒரு செல்லப் பெயர் புதுக்கோட்டைப் பகுதிக்கு உண்டு. கண்மாய்களையும் கிணறுகளையும் நம்ப வேண்டிய பகுதி. எனவே வானம் பொழிந்தால்தான் இங்கு வளம் பொழியும்.

இப்போதைய புதுக்கோட்டை, மாவட்ட அந்தஸ்துப் பெற்றுவிட்டது. ஒரு சின்னக் கிராமம், அதுவும் புதுக்கோட்டை நகரை ஒட்டிய பகுதியாகப் பார்த்துப் புறப்படுகிறோம்.

**அரசந்தம்பட்டி!**

திருமயம் வட்டத்துப் பேரையூரைச் சேர்ந்த சின்னஞ் சிறிய கிராமம். வரலாற்றுப் புகழ் பெற்ற வெள்ளாற்றின் தென்



கரையில் சுமார் அறுபது வீடுகளுடன் இன்னமும் உறங்கிக் கொண்டிருக்கிற கிராமம்.

அரசந்தம்பட்டியில் வேளாண்மைதான் முக்கிய தொழில் என்கிறார்கள். நெல், கேழ் வரகு பயிர் செய்வார்கள். ஏரியை நம்பியாக வேண்டும். ஏரி பெருகினால் ஐந்து மாதம் சமாளிப்பார்கள்.

நாம் போயிருந்த நேரம் சுத்தமான வறட்சி. வெறும் மண்ணைக் குவித்துச் சாலை என்று பெயர் பண்ணி யிருந்தார்கள். தன் னிறைவுத் திட்டம் என்று சொன்னார்கள். ஒரு சின்னத் தூறல் விழுந்தாலும் இந்தச் செம்மண் சாலை காணாமல் போய்விடும்.

அரசந்தம்பட்டியிலிருந்து ஐந்து கி. மீ. தொலைவில் நமணசமுத்திரம் ஆலை. கிராமத்திலிருந்து சுமார் பத்துப் பேர் அதில் வேலை செய்கிறார்கள்.

நாடார்கள், அம்பலக்காரர்கள், வேளாளர்கள் தவிர அரிசனங்களும் இருக்கிறார்கள்.

நாம் ஊருக்குள் நுழைகிறபோதே ஏதோ அரசாங்க அதிகாரிகள் வருகிறார்கள் என்கிற பரபரப்பில் கூடுகிற மக்கள்.

நான் அரசாங்க ஆள் இல்லை. பத்திரிகைக்காரன் என்று அறிமுகம் செய்துகொண்டவுடன் அவர்களுடைய ஆர்வம் குறைகிறது. இருந்தாலும் தங்களுடைய காலம் காலமான குறைகளைச் சொல்கிறார்கள்.

மிராசுதார் இராமையா பிள்ளை. இந்தக் கிராமத்தைப் பற்றிய ஐம்பது வருட கால "வளர்ச்சி" இவருக்குத் தெரியும். சுந்தர நாடார். நாற்பது வருட கால நினைவுகள் இவருக்கு உண்டு.

"காமராஜர் காலத்தில் ஏரி முழுவதும் தூர் வாரினார்கள். அப்புறம் கலைஞர் காலத்தில்

ஏரியின் தெற்குப் பகுதியை மட்டும் ஆழப்படுத்திக் கரையை உயர்த்தினர்கள். இப்போது எதுவுமே இல்லே'' என்கிருர், சுந்தர நாடார்.

புதுக்கோட்டை சமஸ்தானம் இருந்த போது இந்த ஏரி முறைப்படி பராமரிக்கப் படுமாம்.

''ஏரியில் தண்ணீர் பெருகினல் இங்கே யாரும் தூங்க முடியாது. கொஞ்சம் அசந் தாலும் கிராமம் வெள்ளாற்ரேடு போய் விடும்'' என்கிருர் இராமையா பிள்ளே.

புதுக்கோட்டை இங்கிருந்து 14 கி.மீ. நாற்ருண்டைக் கொண்டாடுகிற மன்னர் கல்லூரி இருக்கிறது. பக்கத்தில் 7 கி.மீ. தொலேவில் நற்சாந்துப்பட்டியில் ஒரு உயர் நிலேப்பள்ளி இருக்கிறது. ஆனலும் இத்தனே வருஷத்திலும் பட்டப் படிப்புப் பெற்றவர் ஒரே ஒருவர் மட்டும்தான் என்பது வியப் பாகவே இருக்கிறது. இப்போது எம். காம் படித்து வருகிற இந்த மாணவரைப் பார்த் ததன் விளேவோ என்னவோ, இந்த ஆண்டு மேல் நிலேப் பள்ளி வகுப்பில் ஒருவர் வணிக வியல் படித்து வருகிருர்.

மற்றபடி அதிகப்பட்சம் எஸ். எஸ். எல்.சி. படித்தவர்கள்கூட ஒன்றிரண்டுபேர்கள்தான். எஸ். எஸ். எல். சி. படித்த பெண் என்று இங்கே யாரையும் காட்ட முடியாது.

''கள்ளுக் கடை திறக்கணும். அப்பத் தாங்க வேலே கெடைக்கும். கணக்கு எழுதற ஆளிலேருந்து கள் இறக்கறவன் வரைன்னு ஒரு கடைக்குப் பத்து சனம் வேலே பாக்கு முங்க'' என்கிருர் சுந்தர நாடார். அவ ருடைய மனேவி ராமாயி அம்மாளும் இதை எதிரொலிக்கிருர்.

ஆனல் மற்ற பிரிவாருக்கு இது உடன் பாடில்லே. கள்ளுக் கடைகள் கிராமத்தில் அமைதியைக் குலேத்துச் சச்சரவுகளே உண் டாக்கும் என்று அவர்கள் அஞ்சுகிருர்கள்.

நேற்றுவரை கிராமத்தின் எந்த ஒரு பிரச் னேக்கும் வழி காட்டியவர்கள் கணக்கப்பிள்ளே கிராம முன்சிப் போன்றவர்கள்தான். இவர் களின் மூலமே கிராம ஜனங்கள் அதிகாரிகளே அணுகியிருக்கிருர்கள். கிராம அலுவலர்கள் பற்றிய அரசின் முடிவுக்குப் பிறகு இனிமேல் என்ன நடக்கும் என்பதைப் பொறுத் திருந்தே பார்க்க வேண்டும்.

''பட்டுப்பெரியானுக்குப் போனவருஷம் பூசை போடலிங்க... வசதி இல்லே. அதாங்க மழை பெய்யலே...''

இப்படி ஒரு கருத்தும் நம் காதில் விழுகிறது. ஆடி மாதம் கிராம தேவதைக்கு நடைபெறும் இந்தப் பூசைக்கு 'வீட்டு வரி' வசூலித்து நடத்துவார்களாம். இரண்டா யிரம் ரூபாய் செலவாகுமாம்.

கூட்டுறவு இயக்கங்கள் பற்றி இவர்களுக் குத் தெரியவில்லே. எந்த உதவியையும் அர சாங்கமே முன்வந்து செய்து தரவேண்டும் என்கிற மனேபாவம் மேலோங்கி யிருக்கிறது.

''எங்களுக்குப் பால் மாடு வாங்கித் தர ணும். பாலேயும் அவுங்களே வாங்கிக்கிட ணும்'' என்பதுதான் இவர்களுக்குத் தோன் றுகிற மாற்று வழி.

ஒரு பத்துப் பதினேந்து குடும்பங்களில் பனே ஓலேக் கூடைகள் முடைகிருர்கள். கைத்தொழில் என்று சொல்ல இது மட்டும் தான்.

ஒரு அவசரமான பிரசவக் கேஸ் என்ருல் 5 கி. மீ. தூரம் புழுதிக் கால்வாயைத் தாண்டிப் பிரதான சாலேக்குப் பெண்களேத் தூக்கிக்கொண்டுதான் போக வேண்டும். மழை பெய்து ஏரிப் பாசனம் தொடங்கி விட்டால் சாலே என்பதே கிடையாது. 5 கி. மீ. தூரமும் அங்கங்கே வெட்டி விடு வார்கள். அப்போது நிலேமையை நினேத்துப் பார்க்கவே முடியவில்லே.

இந்தக் கிராமத்தில் அரசியல் கட்சிகள் வேர் பிடிக்கவில்லே. ஒரு பக்கம் இது ஆறுதல் அளிப்பதாய் இருந்தாலும், கிராமம் வளர்ச்சி பெருமைக்கு இதுவும் ஒரு காரணமோ என்று கூடத் தோன்றுகிறது.

''நாங்கள்ளாம் சோத்துக் கட்சிங்க... எலெக்சன் சமயத்திலே பெரியவங்க பார்த்து யாருக்கு ஓட்டுப் போடச் சொல்ருங்களோ அதாங்க... இதுவரைக்கும் மந்திரிங்க யாரும் இங்க வந்ததில்லிங்க. எலெக்சன் அப்ப ஓட்டுக் கேட்க யாராச்சும் வர்ரதோட சரி.''

இந்தக் கிராமத்தில் ஒரு மன நிறைவளிக் கிற விஷயமும் உண்டு. நோய்த் தொல்லே என்று எதுவுமே கிடையாதாம். எப்போ தாவது காலரா, அம்மை என்று அறிகுறிகள் கண்டால் நற்சாந்துபட்டி மருத் துவ மனேயிலிருந்து உடனே வந்து தடுப்பு ஊசி போட்டு விடுவார்களாம்.



ஹெல்த் விசிட்டர்கள் மாதம் தவறாமல் வந்து தேவையான மருந்து மாத்திரைகள் தந்துவிடுகிறார்களாம்.

எந்த வித அடாவடித்தனமும் இல்லாத அமைதியான கிராமம் என்கிறார் பிராக ராமையா பிள்ளை.

வறுமை எவ்வளவுதான் தாண்டவமாடி னாலும், ஒன்று மட்டும் விசுவரூபமெடுத்து வருவது தெரிகிறது. பெண்களைக் கட்டிக் கொடுக்க வேண்டுமானால் வெளியூர்களில் தான் மாப்பிள்ளை தேட வேண்டும். பத்துப் பவுன் நகை, மோட்டார் சைக்கிள் என்று கேட்கிறார்கள். அதுவும் ஆறு வருஷமாய்த் தான் இந்த நிலை என்கிறார்கள். விளைவு, கிராமத்தில் திருமணமாகாத பெண்களின் எண்ணிக்கை கூடிக் கொண்டே போகிறது.

நகரங்களைப் பார்த்து வேறு எதைக் கற்றுக் கொள்கிறார்களோ இல்லையோ, இதுபோன்ற தேவையற்ற விஷயங்கள் நன்கு பாடமாகி விடுகின்றன.

இது ஒரு மாதிரிக் கிராமம் இல்லைதான். இதை வைத்து ஒரு மாவட்டத்தை எடை போட முடியாது என்பதும் உண்மை. இருப் பினும், மன்னர் ஆட்சியின்போது வளம் கொழித்த ஒரு பூமி, மக்கள் ஆட்சி முறை யின் நடைமுறைகள் எப்படி இருந்தபோதி லும், இன்னமும் அவலம் சூழ்ந்ததாகவே இருக்கிறது என்பதும் உண்மை.

புதுக்கோட்டை முனிசிபல் எல்லைக்குள் அமைந்த திருவப்பூர்ப் பட்டு நெசவும், பக்கத்துக் கிராமம் செல்லுகுடிக் கம்பள நெசவும் – இப்போது வெறும் கதைகள். நகரங்கள் வளர்ச்சியடையும் அதே நேரத் தில் கிராமங்களும் கிராமத் தொழில்களும் நசித்துப் போக வேண்டும் என்பது தவிர்க்க முடியாததா?

**- நகர் வாலா**

[நீங்கள் கிராமத்தில் வசிக்கிறீர்களா? அல்லது உங்கள் பூர்வீக கிராமத்துக்குச் சமீபத்தில் சென்று வந்தீர்களா?- அப்படியானால் அக்கிராமத்தின் சாத னைகள் அல்லது அதற்கு ஏற்பட்ட சோதனைகள், அது சந்திக்கும் பொருளாதார, சமூகப் பிரச்னைகள், மக்க ளின் துயரங்கள், மகிழ்ச்சிகள், தொழில், பண்பாடு முதலிய பல கோணங்களில் அதனைப்பார்த்து ரசமாக வும் சுருக்கமாகவும் (கல்கியில் ஒன்றரைப் பக்கத்துக்கு மேற் போகாமல்) எழுதுங்களேன். பிரசுரமாகும் சுவையான கட்டுரைகளுக்குப் பரிசு உண்டு. வசதிப் பட்டால் புகைப்படங்களும் அனுப்பலாம். - ஆசிரியர்]

# அனந்தனின் ஆறவது சாதனை!





உலகத்தில் பல்வேறு துறைகளிலும் அதிசயமான செயல்களையும் சாதனைகளையும் புரிந்தவர்களைப் பற்றிச் செய்திகளைத் தொகுத்துத் தருவது ஆண்டுக்கு ஒரு முறை பிரிட்டனிலிருந்து வெளிவரும் ''கின்னஸ் உலக சாதனைகள்'' (Guinness World Records) என்ற புத்தகம். இந்தப் புத்தகத்தில் இதுவரை ஐந்து விதமான சாதனைகள் செய்து இடம் பெற்றுள்ளார் ஸ்ரீலங்காவைச் சேர்ந்த விவேகானந்த செல்வ குமார் அனந்தன். 36 வயதான இந்தத் தமிழரின் ஆறாவது சாதனை 72 மணி நேரத்துக்கு மேல் தண்ணீரில் இருந்ததுதான். ஜூன் 28ம் தேதி இரவு 7–30 மணிக்கு தண்ணீரில் இறங்கிய அனந்தன் ஜூலை 1ம் தேதி இரவு 7–30 மணிக்கு, ஏற்கனவே உலக சாதனையாகக் கருதப்பட்டு வந்த 72 மணி நேரத்தைக் கடந்தார். இந்தக் கட்டுரை எழுதப்படும் சமயத்தில் கிட்டத்தட்ட 80 மணி நேரம் தண்ணீரில் இருந்து பிரமிக்கத் தக்க சாதனையை ஏற்படுத்தி யிருக்கிறார். இவர் இந்த அரிய சாதனையைச் செய்த இடம் சென்னை அண்ணா நீச்சல் குளம். இதற்கான ஏற்பாடுகளைச் செய்தவர்கள்: ''சென்னை ஜேஸிஸ்'' என்ற அமைப்பினர்.

''தமிழ் மண்ணில் இந்தச் சாதனையைச் செய்ததற்காகப் பெருமைப்படுகிறேன்'' என்கிறார் இந்த இளைஞர். தண்ணீரில் இருக்கும் ஒவ்வொரு மணி நேரத்துக்கும் ஐந்து நிமிடம் ஓய்வு எடுத்துக்கொள்ள விதிகள் இருந்தாலும் சில சமயத்தில் தொடர்ந்து எட்டு மணி நேரம் ஓய்வு எடுக்காமலேயே இருந்திருக்கிறார் அனந்தன்.

இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையே உள்ள பாக் ஜலசந்தியை இரண்டு முறை நீந்திக் கடந்தவர் அனந்தன். ஆனால் இந்தச் சாதனை 1981ம் வருடத்திய கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறாதது கண்டு மிகவும் வேதனைப்படுகிறார். ''இங்கேயும் ஆசியர்கள், ஐரோப்பியர்கள் என்று அரசியல் வந்துவிட்டதோ என்று அஞ்சுகிறேன்'' என்கிறார்.

தண்ணீரில் 72 மணி நேரத்துக்கு மேல் இருந்த சாதனையைப் புரிவதற்கு முன் இரண்டு மாதங்கள் கடுமையான பயிற்சிகளை மேற்கொண்டார் அனந்தன். தினமும் 20 மைல்கள் நடப்பாராம். அதுவும் எப்போது? இரவு 12 மணி முதல் காலை 6 மணி வரையில். தண்ணீரில் இருந்தபோது இவர் சாப்பிட்டது வேகவைத்த உருளைக் கிழங்கு, பால்.

அனந்தனின் நெருங்கிய நண்பர் ஒருவரிடம் பேசிக் கொண்டிருந்தபோது தெரிய வந்த விஷயம்: ''அனந்தனுக்குத் தண்ணீர் என்றால் பிடிக்காது!''

ஸ்ரீலங்காவில் ''ஹோண்டா'' மோட்டார் சைக்கிள்கள் இறக்குமதி வர்த்தகம் செய்யும் அனந்தனுக்கு இரண்டு மகன்கள். இவரது மனைவி ஒரு சிங்களப் பெண். பெற்றோர்கள் அனுமதியோடு இவர்கள் காதல் திருமணம் நடந்தது.

கட்டுரை: ப்ரியன்; படங்கள்: ''சுபா''



# ஜயன் ஜயம்!

"சென்னைக்கு வந்த புதிதில் சில நாள் ஹோட்டல் வாசம். பிறகு எனக்கு ஒரு பெரிய நிறுவனத்தில் வேலை கிடைத்தது. அந்த நிறுவனத்தின் தலைவருக்குச் சொந்தமான வீட்டிலேயே என்னைத் தங்கிக் கொள்ளச் சொன்னார். அந்த வீட்டுக்குச் செல்வோமா?'' என்றார் விஜயன்.

சாஸ்திரி நகரில் இருக்கும் அந்த வீட்டு வாசலில் காரை நிறுத்தி, ''குருஜி வீடு சார்'' என்று வாய் பொத்திக் கூறியபடியே அடக்கமாக நடந்தார் விஜயன், தமது இன்றைய அந்தஸ்தை ஒதுக்கி வைத்து!

இன்று அந்த வீட்டில் இருப்பவர்கள் ஷர்மா தம்பதியினர். திருமதி ஷர்மா மட்டுமே இருந்தார். எங்களை வரவேற்று அலுவலகத்துக்குச் சென்றிருக்கும் திரு ஷர்மாவுக்கு ஃபோன் செய்ய, அவர் ஃபோனிலேயே விஜயனை வரவேற்றார்.

''வீடு அப்படியேதான் இருக்கிறது சலன், மாற்றமே இல்லை. இந்த வீட்டில் நாங்கள் மூன்று பிரம்மச்சாரிகள் குடியிருந்தோம்'' என்று சொன்ன விஜயன் எதையோ நினைத்துக்கொண்டவர் போல் சிரித்தார்.

''என்ன சொல்லுங்கள்'' என்று தூண்டினேன்.

''ஒரு நாள் மாலை வீட்டுக் கதவு தட்டப்பட்டது. அநேகமாய் வீட்டுக் கதவு திறந்தேதான் இருக்கும். காரணம், நாங்கள் மூன்று பேருமே பிரம்மச்சாரிகள். பெரிய அளவில் பாத்திரம் பண்டம் எதுவும் இல்லை. எனவே கதவைச் சாத்தி வைக்க வேண்டிய அவசியமும் இல்லை. கதவு தட்டப்பட்டவுடன் அது தானே திறந்து கொண்டதைக் கண்டு, தட்டியவர், அதிசயத்துடன் உள்ளே நுழைவதா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்தார். அன்று நான் மட்டுமே வீட்டில் இருந்தேன். வாசலில் சென்று பார்த்தவனுக்கு ஒரே ஆச்சரியம். அங்கு நின்றது ஒரு பெண். ''என்ன?'' என்று கேட்டேன். என்னுடன் தங்கியிருக்கும் நண்பரின் பெயரைச் சொல்லி ''அவர் இருக்கிறாரா?'' என்று கேட்டாள். ''இல்லை'' எனச் சொல்லிவிட்டு இலேசாகப் பேச்சுக் கொடுத்து விஷயம் என்ன என்று கேட்டுத் தெரிந்து கொண்டேன். எனது நண்பரும் அந்தப் பெண்ணும் ஒருவரை யொருவர் காதலிக்கின்றனர் என்பது புரியவந்தது. மாலை வீட்டுக்கு வந்த நண்பனைக் குடைந்து கேட்க அவனும் ஒப்புக் கொண்டான். தொடர்ந்து அந்தப் பெண் அடிக்கடி வர ஆரம்பித்தாள். காதலர் இருவரும் சந்திக்க எங்கள் வீடுதான் பார்க்காகியது. அதுவே எங்களுக்குப் பெரிய பிரச்னையாயிற்று. பிரம்மச்சாரிகள் இருக்கும் வீட்டுக்கு ஒரு பெண் தனியே வந்து சென்றால் நன்றாக இருக்குமா? பார்ப்பவர்கள்



✕ சிறந்த கதாசிரியராக வந்து விடலாம் என்று நான் யோசித்தேன்... அதுா





⌘ தோட்டத்தில் காய்கறிகள் பயிரிட்டு சமைத்துச் சாப்பிட மட்டுமல்ல...

⌘ சுயம்பாகமாகச் சமைத்துக் கொள்வோம்

என்ன நினைப்பார்கள்? இதற்காக நாலு பேருமே மாலையில் வாசலில் நாற்காலிகள் போட்டு உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்போம். கொஞ்சம் தர்மசங்கடமாக இருந்தாலும் நண்பனுக்காக ஒத்துழைத்தோம். இன்று அவர்கள் கணவன் மனைவியுமாக, சௌக்கியமாய் இருக்கிறார்கள்'' என்று கூறி முடித்தார் விஜயன்.

''நீங்கள் ஒரு கதாசிரியராகத்தானே திரைப் பட வாழ்க்கையை ஆரம்பித்தீர்கள்?'' என்று நினைவு அலைகளை மறுபடி கிளறினேன்.

''ஆமாம். இங்கு நான் வசித்தபோது தான் எனது கதை திரைப்படமாகியது. படத்தின் பெயர் சங்கு புஷ்பம். ஒரு நல்ல கதாசிரியராக வந்துவிடலாம் என்றுதான் நினைத்தேன். ஆனால் காலம் எங்கே என்னைக் கதை எழுத விட்டது? இயக்குனர் அரவிந்தன் அப்பப்போது வந்து பேசிக் கொண்டிருப்பார். 'உத்தராயணம்' படத்தில் நடிக்க இதே அறையில் உட்கார்ந்து கொண்டுதான் என்னை அழைத்தார்.''

சமையலறையைத் தாண்டிச் சென்றபோது ''பிரம்மச்சாரிகளான நீங்கள் சுயம்பாகமாகச் சமைத்துக் கொண்டிருப்பீர்கள்'' என்றேன்.

''அது மட்டுமில்லை சலன்! காய்கறிகளை நாங்களே பயிரிட்டுக் கொள்வோம்'' என்றார் விஜயன். ''அதை விட முக்கியம் என்னவென்றால் பர்ஸ் காலியாக இருக்கும் போது அந்தக் காய்கறிகளை விற்றுக் காசாக்கியும் இருக்கிறோம்!''

''மொட்டை மாடிக்குப் போவோமா?'' என்றேன்.

''இந்த வீட்டில் மொட்டை மாடிதான் இருக்கிறது. போக வழி கிடையாது'' என்றார் விஜயன். ''இதனால் ஏற்பட்ட விபரீதம் தெரியுமா?'' என்று கேட்டுவிட்டுத் தொடர்ந்தார்:

''என் நண்பர்கள் இருவரும் வெளியூர் சென்றிருந்தார்கள். பவர் கட். ஃபேன் ஓடலை. புழுக்கத்தில் உள்ளே படுக்க முடியாமல் தவித்த நான், 'மொட்டை மாடிக்குச் சென்று படுத்தால் என்ன?' என்று எண்ணி வெளியே வந்தேன். கும் இருட்டு. சுவரைப் பிடித்து எகிறிக் குதித்து சர்க்கஸ் வேலை செய்து ஏறிப் போய்விடலாம் என்று ஆரம்பித்தேன். அதன் முடிவு கீழே கட்டாந்தரையில் விழ, உடல் விண் விண் என்று தெறித்தது. கூச்சல் போட்டு அக்கம் பக்கத்தை எழுப்பக் கூச்சம். மயக்கமாக அப்படியே தூங்கியிருக்கிறேன். காலையில் பால்காரி வந்துதான் எழுப்பினாள்!'' என்று கூறிச் சிரித்தார் விஜயன்.

திருமதி ஷர்மாவிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்பினோம்.

பேட்டி: ''சலன்''

புகைப்படங்கள்: சுபா மனோகரன்

# மகேந்திரா சுருளியின் இடத்தைப் பிடிப்பாரா?





⌘ ச. முத்துப்பாண்டியன், மதுரை 1

கே: எந்த மாதிரி கேள்வி கேட்டால் பரிசு கொடுப்பீர்கள்-(பதிலை ரகசியமாகச் சொல்லுங்கள்)

ப: ''...................''

⌘ ஏ. சுப்புராம், சித்தோடு

கே: 'காஃகா படித்த சித்தர் போல' என்று ஒரு கட்டுரையில் இருந்தது. காஃகா — அது என்ன? அல்லது அவர் யார்? என்ன எழுதினார்?

ப: காஃகா ஒரு எழுத்தாளர். செக்கோஸ்லாவாகியாவில் வாழ்ந்தவர். 1924ல் தமது 41வது வயதில் காலமான இவரது எழுத்துக்களில் பல இவர் காலமான பிறகுதான் பிரசுரம் ஆயின. இவரது மூன்று நாவல்கள் —முழுமையாக எழுதப்படாதவை — அவர் இறந்த பிறகு பிரசுரம் ஆயின. இவை மிகச் சிறந்த எழுத்துக்கள் என்று கருதப்படுகின்றன.

⌘ எஸ். நிரஞ்சனா, புதுவை

கே: மகேந்திரா விரைவில் சுருளியின் இடத்தைப் பிடிப்பாரா?

ப: அந்த ஆசை அவருக்கு இருக்கிறதா என்று தெரியவில்லை. மகேந்திரா நல்ல நகைச்சுவை நடிகர். கோமாளித்தனமாகச் சில சமயம் செய்வதுதான் எனக்குப் பிடிக்கவில்லை. தனக்கென்று பாணி வகுத்துக் கொண்டு நடிக்கட்டும். சுருளியின் பாணியை வேறு யாராவது காப்பி அடிக்கட்டும் (அந்த இரட்டை அர்த்த வசனங்கள், பச்சை மொழிகள்... மகேந்திராவுக்கு வேண்டாம்.)

⌘ சீதா மகாலட்சுமி, புதுச்சத்திரம்

கே: கிண்டர் கார்டன் பள்ளி என்கிறார்களே அதன் பொருள் என்ன?

ப: அது ஜெர்மன் மொழிப் பதம். குழந்தைகளின் தோட்டம் என்று பொருள். முதல் கிண்டர் கார்டன் பள்ளி சுமார் 140 வருஷங்களுக்கு முன்பு நிறுவப்பட்டதாக ஒரு என்சைக்ளோபீடியா கூறுகிறது.

⌘ ஜி. துரைராஜ், பெரம்பலூர்

கே: லேட்டஸ்ட் என்ன?

ப: லேட்டஸ்ட்டா... உம்.... பால்பாயிண்ட் பேனாவில் கிளிப்பை ஒட்டி ஒரு சிறிய டிஜிடல் கடிகாரம். தலையை அழுத்தினால் தேதியையும் அது சொல்கிறது.

⌘ மாலினிராஜா, சென்னை-17

கே: பாட்டு எழுதுகிறவர்களுக்கும் வாக்கேயக்காரர்களுக்கும் என்ன வித்தியாசம்?

ப: நிறைய உண்டு. பாட்டு எழுதவும் தெரிய வேண்டும்; அதற்கு இசை அமைக்கவும் தெரியவேண்டும்; பிறகு அதைப் பாடவும் தெரிய வேண்டும். இந்த மூன்று வித்தைகளும் கைவந்தவர்கள்தான் வாக்கேயக்காரர்கள் (எனக்கும் ரொம்ப நாளாக இந்தச் சந்தேகம் இருந்தது. டி.எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரி ஒரு சமயம் விளக்கிய பிறகுதான் சந்தேகம் தீர்ந்தது)

⌘ ரவிப்பிரியா, விழுப்புரம்

கே: நமது தலைவர்களுக்குக் கொஞ்சம் கூட நகைச்சுவை உணர்வு இல்லையே?

ப: ஒட்டு மொத்தமாகச் சொல்ல முடியாது. நேரு, ராஜாஜி, தேசாய், அண்ணா, கருணாநிதி என்று பட்டியல் போட முடியும்., ஒன்றை மட்டும் ஒத்துக் கொள்ள வேண்டும். பெரும்பான்மையானவர்களுக்கு நகைச்சுவை உணர்வு போதாதுதான். (ஒரு போலைஸ், பிலிப் கோமகன் ஒரு திறப்பு விழாவில் சொன்னது: 'இந்தப் பல் ஆஸ்பத்திரியைத் திறந்து வைக்கிறேன் —அகலமாக!')

பரிசு பெறுபவர் :

ஏ. சுப்புராம்,
வீரபத்திர செட்டியார் காம்பவுண்ட்,
சித்தோடு







## கடுகு பதில்கள்!



மகாலட்சுமீ
வந்தாள்!
நம் குடும்பத்திற்கு
வந்ததுபோல்
எல்லா
மணப்பெண்களும்
சாரதாஸ்
முகூர்த்தப்
பட்டுபுடவை
அணிந்து
மகாலட்சுமிகளாக
அவரவர்
குடும்பத்தில்
விளங்க
வேண்டும் என
வேண்டுவோம்.
சாரதாஸ்
(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)
N.S.B. ரோடு.
திருச்சி-620 002
போன் : 27077
தன் பில்டிங்
மவுண்ட் ரோடு.
சென்னை-600 002.
போன் : 87177
திருமணத்திற்கு ஏற்ற
பனாரஸ் புடவைகள் புதிய
டிசைன்களிலும் வண்ணங்களிலும்
வந்துள்ளன.
SARATHA'S
MADRAS & TRICHY

# பாவம் பாண்டா!

இலங்கைச்செய்தி இது:

பாண்டாவுக்கு வயது மூன்று. குடிசையைவிட்டு வெளியேறி அம்மாவுடன் தோட்டத்துக்குப் போனான். தோட்டத்தில் பீன்ஸ் நிறையக் காய்த்திருந்தது. இளசாக ஒன்றைப் பறித்து ஆசையோடு பாண்டா தின்றான். சில நிமிடங்கள் கூட ஆகவில்லை: சிறுவன் தரையில் விழுந்து துடித்தான். வாந்தி எடுத்தான். கண்டி மருத்துவ மனைக்கு எடுத்துச் சென்றார்கள். ஆனால் வழியிலேயே உயிர் பிரிந்துவிட்டது.

பாண்டாவுக்கு என்ன நேர்ந்தது? இரண்டு மணி நேரம் முன்புதான் அவன் அப்பா தோட்டத்துக்குப் பூச்சி மருந்து அடித்திருந்தார். பயிர்களை நாசமாக்கும் பூச்சிகளைக் கொல்லும் மருந்து அவர் மகனையும் பலி வாங்கிவிட்டது!

குழந்தை பாண்டா மட்டுமல்ல; பெரிய விவசாயிகள் கூடப் பாதிக்கப்படுகிறார்கள். உடனடியாக உயிர் போகாவிட்டாலும் உபாதைகள் ஏற்படுகின்றன.

பூச்சி கொல்லி மருந்து அடித்து விளைவிக்கப்பட்ட காய்கறி, பழங்கள் முதலியவற்றை நன்றாகக் கழுவிவிட்டு உண்டாலும் கூட விஷம் அடியோடு நீங்குவது இல்லை. காரணம், மருந்துகளைச் சரியான அளவில் உபயோகிக்காமல் அதிகமாகப் பயன்படுத்துவதுதான். அப்போது அது செடியினுள் கிரகிக்கப்படுகிறது. விஷம் ஊடுருவிய காய்கறி அல்லது பழங்களை நாம் சாப்பிடும்போது அந்த விஷம் படிப்படியாக நமது உடலில் ஏறுகிறது, தங்குகிறது. ஓர் அளவுக்கு மேல் சேர்ந்த பிறகு அபாயம் விளைவிக்கிறது!

செய்தி, கார்டூன்:
பிரஸ் இன்ஸ்டிடியூட் ஆஃப் இந்தியா











# கண்ணதாசன் மனவாசம்

## 52. இந்தியாவே! என் இந்தியாவே

ஒரு இந்தியன் எந்த நாட்டுக்குப் போனாலும் அந்த நாட்டைத் தன்னுடைய நாடாக ஆக்கிக் கொள்வது வழக்கம்.

சரியாகவோ தவறாகவோ இந்தியா தன் பாரம்பரியப் பெருமைகளையெல்லாம் இழந்து விட்டது போல் தோன்றுகிறது.

அரசியலில் ஜனநாயகம் என்று ஒன்று வந்த பிறகு, இந்த ஜனநாயகத்துக்குக் கட்டுப்பட்டு வாழ்கின்ற மக்கள் ஒழுக்கத்துக்கும் கட்டுப்பட்டு வாழ்ந்தாக வேண்டும் என்ற நிலைமையை ஏற்படுத்திக் கொள்ளவில்லை. ஜனநாயகம் ஒழுக்கத்தைச் சிதறடித்துவிட்டது.

வியாபாரத்தில் எந்த விதமான நாணயமும் இல்லாமல் போனது, இந்த நாடு ஒன்றிலேதான்.

தனி ஒரு மனிதனுக்கு நாணயமோ, நாகரிகமோ இல்லாமல் போனது இந்த ஒரு நாட்டிலேதான்.

இந்த நாணயக் குறைவு நீண்ட காலமாக இருந்து வந்த ஒன்றுதான் என்றாலும், இன்று தேசிய மயமாக ஆகிவிட்டது போல் தோன்றுகின்றது.

எந்தப் பக்கம் திரும்பினாலும் எப்படியாவது வாழ வேண்டும் என்ற உணர்வு தோன்றுகிறதே தவிர, இப்படித்தான் வாழ வேண்டும் என்ற கட்டுப்பாடு தட்டுப்படவில்லை.

அதனால் பிற நாடுகளைப் பார்க்கும்போதெல்லாம் மனத்தில் ஒரு ஆதங்கம் ஏற்படுகிறது. இந்தியா இதிலே பத்து சதவிகிதம் கூட இல்லையே என்று தோன்றுகிறது.

இந்தியாவை உண்மையாக நேசிக்கின்ற அவனைப் போன்றவர்கள் கூட, அப்படித்தான் கருத வேண்டி இருந்தது.

மலேஷியாவில் போய் இறங்கி அந்த மண்ணை மிதித்ததும் இந்த நாட்டினுடைய அழகு இந்தியாவுக்கு வரவில்லை என்று முதல் குறை தோன்றிற்று. உள்ளே போகப் போக, ஒவ்வொருவரையும் பார்க்கப் பார்க்க 'இந்த நாட்டினுடைய ஒற்றுமை இந்தியாவுக்கு வரவில்லையே' என்று தோன்றிற்று.

வியாபாரத்தைக் கவனிக்க, வியாபாரத் துறையில் போய்ச் சாமான்கள் வாங்க, 'அடடா! இந்த நாணயம் இந்தியாவில் இல்லையே' என்று தோன்றிற்று.

ஹோட்டலுக்குள் நுழைந்து சாப்பிடும் போது, 'அடடா! இந்த உணவும் சுவையும் இந்தியாவில் இல்லையே' என்று தோன்றிற்று.

எதைத் தொட்டாலும் கூட இந்தியாவில் இல்லையே என்ற குறை தட்டுப்பட்டதே தவிர இதைவிட இந்தியா தேவலை என்ற உணர்வு ஏற்படவில்லை.

மலேஷிய நண்பர்கள் அவனை வெகுவாகக் கவனித்தார்கள். போய் இறங்கிய உடனேயே அவனுக்கு நிகழ்ச்சிகள் வைத்திருந்தார்கள்.

மலேஷியக் கடிகாரத்துக்கும் இந்தியக் கடிகாரத்துக்கும் இரண்டு மணி நேரம்தான் வித்தியாசம். இந்தியாவை விட அங்கே இரண்டு மணி நேரம் அதிகம். அதனாலே சற்றுக் களைப்பு உடம்பிலே இருந்தது. அந்த நாடு நிகழ்ச்சிகளிலே அவன் கலந்து கொண்டான்.

※ விநோதத் தலை அலங்காரத்துடன் மலேசிய நடனமங்கை



※ பெர்லின் ஹோட்டல்





## கழுத்தில் விழுந்த மாலை — வாசகர் கருத்து

● உலகத்தில் எத்தனை வகையான பூக்கள் பூக்கின்றனவோ அவை அனைத்தையும் ஒன்றாகச்சேர்த்து மாலையாகத் தொடுத்து லக்ஷ்மி அவர்களின் கழுத்தில் போட வேண்டும் போல் தோன்றுகிறது.
கும்பகோணம் — திருமதி பிரசன்னா ராஜன்

● 23 வாரங்களாகக் 'கழுத்தில் விழுந்த மாலை' தொடர்கதை தொய்வு இல்லாமல் விறுவிறுப்பாக இருந்தது. இந்த வாரம் முடிந்து விட்டதே என்று வருத்தம்தான். ஆனால் லக்ஷ்மி அவர்கள் சுபமாக முடித்து விட்டார் என்பதில் மகிழ்ச்சியும் கூட.
விழுப்புரம் — எஸ். லக்ஷ்மி

● ஹர்ஷனைப் போன்ற குறுகிய மனப்பான்மை கொண்ட ஆண்களுக்குச் சரியான சவுக்கடி கொடுத்திருக்கிறார் ஆசிரியை. மன்னிக்கத் தெரிந்தவன்தான் மனிதன் என்பதற்கொப்ப மனம் திருந்திய ஹர்ஷனை மன்னித்து ஹர்ஷன் – மாதங்கி வாழ்வு மலர வாழ்த்துவோம்.
சென்னை-18 — அருணா பாலசுப்பிரமணியன்

● கழுத்தில் விழுந்த மாலைக்கு உள்ள மகிமையை மிகவும் அற்புதமாக ஆசிரியர் சித்திரித்துவிட்டார். எங்கே மாதங்கி ஹர்ஷனை விவாகரத்து செய்து விடுவாளோ என்று பயந்தேன். முடிவு மிகவும் அருமை.
மயிலை — எஸ். சுவாமிநாதன்

● ஒவ்வொரு பெண்ணுக்கும் அவளின் சுய பலத்தை உணர்த்தி மற்றுமோர் புதுமைக் கதையைப் படைத்து விட்டார் லக்ஷ்மி. வித்தியாசமாகவும், விறுவிறுப்பாகவும் எழுதிய லக்ஷ்மிக்கு ஒரு பங்கு பாராட்டு என்றால் பிரசுரித்த கல்கிக்கு இரண்டு பங்கு நன்றி.
திருச்சி-4 — ஜி. அமுதா

● ஹர்ஷனும் மாதங்கியும் இணைந்ததில் மகிழ்ச்சியும், பூரிப்பும் அடைகிறேன். நர்மதா அம்மாவும் நினைவில் நிற்கிறார்கள்.
லக்ஷ்மி அவர்களின் அடுத்த கதையை மிகவும் ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.
கும்பகோணம் — எல். காமு லெக்ஷ்மணன்

● அழகுக்கு அழகு சேர்த்தாற் போன்று அமைந்திருந்த ஓவியர் 'விஜய'வின் கை வண்ணத்தை மறக்கவே முடியாது.
சென்னை-63 — கே. பாபு

● வழக்கத்திலிருந்து மாறுபட்டு அமைந்து மனத்தில் பதியும் வண்ணம் சிறந்த ஒப்பற்ற நாவல் ''கழுத்தில் விழுந்த மாலை.''
வடலூர் — வெ. லட்சுமிநாராயணன்

வானொலியில் இருந்து ஆட்கள் வந்திருந்தார்கள். பேட்டி கொடுத்தான். டெலிவிஷனுக்கு அழைத்தார்கள். போய் அங்கேயும் கலந்து கொண்டான்.

உடனே கோலாலம்பூர் தண்டபாணி கோவிலிலே ஒரு சொற்பொழிவு வைத்திருந்தார்கள். அதிலேயும் போய்ப் பேசினான்.

இரவு ஒன்பது மணிக்கு சின ஹோட்டல் ஒன்றில் சாப்பிட உட்கார்ந்தபோது, அந்தச் சாப்பாட்டினுடைய சுவை இந்தியாவில் எந்த உணவுக்கும் இல்லையென்பதுபோல் அவனுக்குத் தோன்றிற்று.

போய் இரண்டு மூன்று நாட்களுக்குள்ளாகவே, அந்த நாடு அவனுக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டது. அதே நேரத்தில் போய் நான்காவது நாளே இந்தியா –பங்களாதேஷ் யுத்தம் ஆரம்பமாகி விட்டது.

''இனி விமானங்களெல்லாம் நின்று போகக் கூடும். நீங்கள் உடனே புறப்படுவதென்றால் புறப்படலாம்'' என்று நண்பர்கள் அவனிடம் வேண்டுகோள் விடுத்தார்கள். அவன் கண்டிப்பாக மறுத்து விட்டான்.

ஆறு மாத காலத்துக்கு விமானம் இல்லை என்றாலும் கூட மலேஷியாவிலேயே தங்க விரும்புவதாக அவன் கூறிவிட்டான்.

அந்த நாடு அவனை அவ்வளவாகக் கவர்ந்திருந்தது. சுகமான வாழ்க்கை என்பது மட்டுமல்ல, சீதோஷ்ண ஸ்திதியும் அந்த நிலையில் இருந்தது.

அவன் அவ்வளவு உறுதியாகச் சொன்னவுடனேயே அவனுக்காக நிகழ்ச்சிகளை அவர்கள் ஏற்பாடு செய்தார்கள்.

பல ஊர்களில் நிகழ்ச்சிகள்.

மலேஷியாவில் ஒரு அதிசயம் என்னவென்றால் சுமார் இருநூறுக்கும் மேற்பட்ட இந்துக் கோவில்கள் இருப்பதுதான். அதிலே மாரியம்மன் கோவில்கள் பாதி. தண்டபாணி கோயில்கள் பாதி. தண்டபாணிக்கென்று அங்கு கோவில்கள் நிறைய எழுப்பி இருக்கிறார்கள். வள்ளி – தெய்வயானையுடன் கூடிய முருகனுக்கு அதிகம் கோயில்கள் இல்லை. இரண்டு மூன்று கோவில்கள்தான் இருக்கின்றன.

இந்தியாவிலே மனைவியை விட்டு விட்டுத் தனியாகக் கப்பலேறுகின்ற தமிழர்கள் தங்களைப் போலவே இருக்கும் தண்டபாணியையே தெய்வமாகக் கருதுகின்றனர்.

அந்தத் தண்டபாணி கோவில்கள்தான் கோலாலம்பூரிலேயும், ஈப்போவிலேயும், பினாங்கிலேயும் எங்கு பார்த்தாலும் எந்தப் பக்கம் திரும்பினாலும்.

ஒரு ஊரிலிருந்து மறு ஊருக்குப் போகும் சாலையிலேயும் மாரியம்மன் கோவில் இருக்கும். உள் கிராமங்களுக்குப் போனாலும் அங்கேயும் மாரியம்மன் கோவில்கள் இருக்கும். அதிலே ஒரு வித்தியாசம் என்னவென்றால் தமிழ் நாட்டிலிருந்து போகின்ற எல்லோருமே முழுக்க முழுக்க அங்கே தண்டபாணி கோவில் வைத்திருக்கிறார்கள்.

யாழ்ப்பாணத்திலிருந்து வந்தவர்கள் எல்லாம் மாரியம்மன் கோவிலையே அதிகம்

நேசிக்கிறார்கள். பெண்கள் அதிகம் மாரியம்மன் கோவில்களுக்குப் போகிறார்கள்.

நாட்டுக் கோட்டை செட்டிமார்கள் தண்டபாணி கோவிலுக்கே அதிகம் போகிறார்கள்.

மாரியம்மன் கோவிலும் தண்டபாணி கோவிலும் ஒரே மாதிரி அங்கே பராமரிக்கப் படுகின்றன.

அந்தக் கோவில்கள் எல்லாவற்றிலும் பேசுவதற்கு அவனை ஏற்பாடு செய்திருந்தார்கள்.'

அடுத்து அவன் போன இடம் ஈப்போ.

ஈப்போ நகரினுடைய மேயர், பாராளுமன்ற உறுப்பினர், ஒரு கட்சியினுடைய தலைவர், அந்த ஊர் எம். எல். ஏ. என்ற பெருமைகளை யெல்லாம் பெற்ற டத்தோ சீனிவாசகம் அங்கே ஒரு கூட்டத்தை ஏற்பாடு செய்திருந்தார்.

அவர் கட்டியிருந்த பிரும்மாண்டமான மாளிகையில், மண்டபத்தில் அந்தக் கூட்டம் நடைபெற்றது. ஏராளமான தமிழர்கள் கூடியிருக்க, மண்டபம் நிரம்பி வழிந்தது.

இப்போதெல்லாம் அவனுக்கு வருகிற அழைப்புகள், மதத்தைப் பற்றிப் பேச வேண்டும் என்றுதானே குறிப்பிடுகின்றன. அந்த மதத்தைப் பற்றி அங்கே நீண்ட நேரம் அவன் பேசினான்.

எல்லாரும் மெய் மறந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஏதோ அந்த ஊரிலேயே தான் வாழ்ந்து விடக் கூடாதா என்ற ஆசையும் கூட அவனுக்குத் தோன்றிற்று. அந்தக் கூட்டத்திலே கூட அதை அவன் வெளியிட்டான்.

மலேஷியாவில் மக்கள் எவ்வளவு ஒற்றுமையாக வாழுகிறார்கள்! மூன்று இனங்கள் வாழுகின்றன. சீனர்கள், மலாய்க்காரர்கள் தமிழர்கள். இந்த மூன்றுக்குள்ளேயும் இன பேதமின்றி அரசாங்கம் நடைபெறுகிறது. அரசாங்கம் மூன்றையும் அங்கீகரித்திருக்கின்றது. மூன்று மொழிகளையும் ஒப்புக் கொண்டிருக்கின்றது.

இவ்வளவு நாகரிகமும், பண்பாடும், இவ்வளவு ஒற்றுமையும் வேறு எந்த நாட்டுக்கும் வராது'' என்று அவன் மேடையிலே பேசிய போது, உண்மையிலேயே அங்கு கூடியிருந்த மக்கள், தாங்கள் அப்படிப்பட்ட ஒரு நாட்டில் வாழுகிறோம் என்ற பெருமிதத்தோடு கையொலி எழுப்பினார்கள்.

அடுத்தடுத்துப் பல ஊர்களில் கூட்டங்கள்.

ஒரு ஊரிலிருந்து இன்னொரு ஊருக்குப் போவதென்றாலே உற்சாகம். காரணம், சாலைகளெல்லாம் ரப்பர் சந்து போடப் பட்டிருந்தன. அந்தச் சாலையிலே பயணம் செய்வது அவ்வளவு சுகம். நமது ஊர்ச் சாலைகளைப் போல் குண்டும் குழியுமாக எங்கேயும் இல்லை. நடுக் காட்டிலே கூட ஒரு வளைவு இருந்து பாலம் இருக்குமானால் அங்கேயும் விளக்குகள் பொருத்தப்பட்டு வழி காட்டிகள் அமைக்கப்பட்டிருந்தன. சாலைகளை யெல்லாம் அவ்வளவு சுத்தமாகப் பராமரிக்கிறார்கள் மலேஷிய நாட்டிலே.

அந்த நாட்டினுடைய சுற்றுப் பயணம் அவன் கருத்தை விட்டு அகலாது. இன்னும் இருக்கிறது. (வளரும்)




● குறும்புத் தனமாக ஜோக் அடிக்கும் வஸந்த், சாமர்த்தியமான சிந்தனை செய்யும் கணேஷ், பைப்பையும் ஆராய்ச்சியையும் ஒன்றாகக் கலைக்கும் பேராசிரியர், இனிக்கும் இனியா இவர்கள் அனைவருக்கும் உயிர் கொடுத்தன சுஜாதாவின் அற்புதமான நடையும் மணியம் செல்வன் படங்களும்.

இணைத்துக்கடவு கல்லாபுரம் தங்கராசு

● கதையினைக் குறுகிய காலத்தில் முடித்து விட்ட ''சுஜாதா'' ஒழிக! என்னைப்போன்ற உள்ளங்கள் உங்களை வாழ்த்த வேண்டுமானால் உடனடியாக இதே போல் ஒரு தொடர் கதையினை கல்கியில் தொடருங்கள்!

ஈரோடு-7 செம்மதியன் — ''205''

● ஒரு வேண்டுகோள்: புத்திசாலித்தனம் + நகைச் சுவை சேர்ந்து எழுதப்பட்ட இந்த அற்புதமான நாவலைத் திரைப்படமாக்கிக் கெடுப்பதற்கு இடம் தராதீர்கள்.

சென்னை-49 ஏ. எஸ். பாலகுமார்

● முடித்த விதம் அபத்தம். தமிழ் சினிமாவில் வருவது போல் இறுதியில் போலீஸ் வருவதைத்தான் குறிப்பிடுகிறேன்.

ஒண்டிபுத்தூர் சிந்தாமணி ஹக்கீம்

● என்ன வஸந்த்! கடைசியில் இப்படிச் செய்துவிட்டாயே! இதுவரை சற்றுத் தடுமாறினாலும் சமாளித்து வந்தாய். ஆனால் கடைசி அத்தியாயத்தில் மிகவும் மோசமாக ஆபாசமாக நடந்து கொண்டு விட்டாயே!

சென்னை-61 வி. ஜி. நேசன்

● டியர் வஸந்த், நீங்கள் குண்டடியிலிருந்து தப்ப வேண்டுமே என்று கலங்கியிருந்தாலும் அதில் தப்பிவிடுவீர்கள் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால் எங்கே இனியாவைக் கல்யாணம் செய்துகொண்டு, என்னைப் போன்ற பல காதலிகளைக் கலங்க விடுவீர்களோ என்று பயந்ததற்கு, நல்ல வேளை—அப்படி நிகழவில்லை!

சென்னை-4 ஆர். மோகனா

● நெல்லை மாவட்ட மாணவ மாணவிகளிடையே வேகமாய் இப்போது ஒரு பழக்கம் பரவி வருகிறது. யாராவது மாணவன் ஒருவன் பெண்ணிடம் அறுவை ஜோக்கோடு அசடு வழிந்தால் அவனை ''வஸந்த் வஸந்த்'' என்று இண்டலிக்கிறார்கள்.

திருநெல்வேலி ச. த. மூர்த்தி

# வாசகர் கருத்து

நிலவான் அரங்கில் நிலாவழகி நித்திய நர்த்தனம் புரிகிறாள்.

கரிய பெரிய இருட் போர்வைக்குள்ளும் அவளது கனிநடத்தில் பிரகாசப் புன்னகை குளுமையாய் ஒளிபரப்புகிறது.

மாளிகையின் நிலா முற்றத்தில் படுத்துக் கொண்டு கனத்த சிந்தனையின் பாரம் தாங்காது அலைமோதி ஆழ்ந்து கிடக்கிறார் சோழ சாம்ராஜ்யத்தின் அமைச்சர் திரு நாராயண பட்டர்.

—'கவிகுமுத சந்திரப் பண்டிதர்'...

இது அவரது புலமைக்குக் கிடைத்த விருது.

தமிழிலும் சம்ஸ்கிருதத்திலும் தகுதி மிக்க மாவல்லவர்.

இப்பேர்ப்பட்டவருடைய அருமை மகள்—அழகு மகள் — பொன்னனைய பேரழகி — கண்ணனைய செளந்தர்ய லகரி—சொர்ண சுந்தரியென்பாள், அவருக்கு ஓர் எரியும் பிரச்னையாகி இருந்தாள். காதல் என்பது எரியும் பிரச்னைதானே?

அதிராஜ சோழன் மூட்டிய காதல் தீயில் சொர்ணசுந்தரி பிரச்னைக்குரிய கேள்விக் குறி.

இந்தக் காதலுக்கு என்ன தீர்வு காண்பது?

''என்ன தீர்வு காண்பது சுந்தரி?''

நிலா முற்றத்தில் ஒளிக் குளிய லெடுத்துக் கொண்டு ஓயாது சிந்தனை வயப்பட்ட நாராயணப் பட்டர்தாம் இக்கேள்விக் குறியை நெஞ்சில் கொடு வாளைப் போல எழுப்பிக் கொண்டிருந்தார் என்பதில்லை.

இதோ சோழ யுவராஜன் அதிராஜ சோழனும், சொர்ண சுந்தரியும் நிலவொளிப் போதையில் களவழிக் கேள்விகளை எழுப்பிக் கொண்டிருக்கிறார்கள்.

''என்னைப் பொறுத்த மட்டும் கவலைப்பட ஒன்றுமே இல்லை; நான் உங்கள் சம்மதத்துக்கெல்லாம் நம்பிக்கையுடன் ஐக்கியமாகிவிட்டவன். எனது தந்தையார்க்கு இது தெரியும். ஒரு நாராயணப் பட்டரைச் சோழ நாடு இழந்துவிடக் கூடாது.''

சொர்ண சுந்தரியின் சொப்பனக் கண்கள் சுகபாதிய தொனியுடன் பனிக்கின்றன. மேலும் அவளது யாழனைய நாவு அசைகிறது:

''இளவரசே! நான் அந்தணப் பெண் என்பதால்தானே உங்கள் தந்தை அஞ்சுகிறார்? அரசர்களுக்கு இந்த சாஸ்திரம் பொருந்தாது என்று அர்த்த சாஸ்திரம் சொல்லுகிறது''



அதிராஜ சோழன் அர்த்தமுடன் தனது சொர்ணப் பதுமையை நோக்குகிறான்.

''சுந்தரி! சாணக்கிய போதனையைக் கேட்க இங்கே சந்திரகுப்த சாம்ராஜ்யமா நடக்கிறது?''

''சொன்னால் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே?''

''ம்ம்!''

''இங்கே தமிழருடைய சாம்ராஜ்யமா நடக்கிறது?''

ஓ...குலோத்துங்க சோழ மகா சக்கரவர்த்திகள் தெலுங்கு ரத்தக் கலப்புடையவர் என்பதை இதை விடக் கூராக யாரால் சொல்ல முடியும்?

இளவரசன் அதிராஜ சோழன் கோபித்துக்கொள்ளவில்லை. சத்தியமான காதல் கோபத்தில் குளிப்பதில்லை.

கூ.....கூ....

'நன்றாகக் கேட்டாயடி!' என்று ஆதரிப்பது போலக் குயில் கூவுகிறது.

காதலர்களின் அப்பட்டமான சமாச்சாரங்களை அருகிலிருந்து ரசிப்பவையே குயில் கூட்டங்கள்....

''புறப்படுவோம் இளவரசே!''

''ம்ஹூம்! நிலா மறையட்டும்.''

''முடிவு?''

''எனக்கு சாம்ராஜ்யம் தேவையில்லை.''

''இது சத்தியம்தானே இளவரசே?''

''சே! என்ன இது? எட்டுச் சுவடிக் காதல்கள் கேட்பது போல!''

''நமது காதல் எட்டுச் சுவடியாய்விடக் கூடாதல்லவா?''

''சுந்தரி! கலிங்கப் போர் முடியட்டும். அப்பாவின் கவலை நமது மகா சேனாபதி கருணாகரத் தொண்டைமான் மீது இருக்கிறது. வெற்றியுடன் திரும்பட்டும். நமது காதலும் வெற்றி பெறும்!''

நிலா மறைகிறது....

அவன் அவளை அணைக்கிறான்.

''தேவையா?''

'''ம்ம்!''

எத்தனையோ முறை இயல்பாகிவிட்ட சங்கமம்.

நிஜமான காதலுக்கு இதுவே சத்தியமான அச்சாரங்கள்...

மரபுகளுக்கு ஆத்மா கிடையாது.

காதலுக்குச் சித்தாந்தம் ஏது? வேதாந்தம் ஏது?

சங்கமம் புனிதமாகிறது.

சங்கமமே புனிதத் துறைதானே?

**வ**ட கலிங்கப் போரில் வெற்றி கண்ட மிதப்பில் சோழப் பேரரசு கோலாகலத்தில் மூழ்குகிறது.

முதலாம் குலோத்துங்க மகா சக்கரவர்த்திகள் அடைந்த பெருமைக்கு ஈடு ஏது? இணை ஏது?

சாம்ராஜ்யமே குதூகலித்துக் கொண்டிருக்கிறபோது இந்த அதிராஜ சோழன் ஏன் அவலமுடன் உலாவுகிறான்?

பட்டத்தரசி — புவன முழுதுடையாள் — தியாகவல்லி தேவியார் கவனிக்கிறாள்.



முதல் பட்டத்தரசி மதுராந்தகி தேவியார் இறக்கிறபோது இவனைப் பற்றித்தான் அதிகமாகக் கவலைப்பட்டார்கள். ஏழு பிள்ளைகளைப் பெற்ற அந்த மதுராந்தகி மகா தேவியார் ஏழாவது பிள்ளையான இவனைப் பற்றிக் கவலைப்பட்டது....

இவனது பிறப்பியத்தில் (ஜாதகத்தில்) அரியணைப் பாக்கியமில்லை. இப்போது இவனது போக்கு அதனை மெய்ப்பிக்கிறது.

''அதிராஜா! இப்படி வா!''

அவனது கண்களில் படர்ந்த நீர் ஒரு காவியத்தைப் பறைசாட்டுகிறது.

''உன்காதலை நான் ஆதரிக்கிறேனடா...''

''அம்மா!''

இளவரசரது முகம் சுந்தரமாய் மலர்ந்து சொர்ணமாய் மின்னுகிறது.

இதழ்களில் புன்னகைப் பிரவாகம்.

''அதிராஜா! சொர்ண சுந்தரி பட்டத்தரசியாக முடியுமா?'' — சிற்றன்னையாயினும் அவனை தாய். அவள் கேள்வி.

''முதலில் நான் பட்டத்தில் அமர முடியுமா? சொல்லுங்கள் அம்மா!''

புவனமுழுதுடைய தியாக வல்லி தேவியார்க்கு விழிப்பு.

ஓ....இவனுக்கு அந்தப் பிறப்பிய மர்மம் தெரியுமோ?

''உனக்கு யார் சொன்னது?''

''ஒருவர் சொல்ல வேண்டுமா? எனக்கு முன்னால் அறுவர் வரிசை கட்டி நிற்கிறார்கள். அவர்களை மீறி நான் அரசுக் கட்டிலில் அமர வேண்டும். இது நடக்கிற காரியமா தாயே!''

ஆ! இவன் பிறப்பியத்தைப் பற்றிக் கூறவில்லை; முன்னே பிறந்தவர்களைப் பற்றிக் கூறுகிறான்.

''ஏன் குமாரா? எங்கேனும் பிரதிநிதியாக இருந்து ஆளக் கூடாதா?''

சிகரெட் புகைப்பது தீங்கானது என உணர்ந்து அப்பழக்கத்தை விட முயல்பவர், சிகரெட் பிடிக்க வேண்டும் என்கிற உந்துதல் ஏற்படும் போதெல்லாம் தொலைபேசியில் குறிப்பிட்ட எண்ணில் தொடர்பு கொள்ளலாம். மறு முனையிலிருந்து இடையறாது இருமல் சத்தம் கேட்கும்! — அமெரிக்காவில்!

-கே. வி. கோபால்




''அதற்குப் பரம்பரை ரத்தம் அவசியமில்லை; அந்தண ரத்தமே போதும்''

அயர்ந்து போனாள் அரசமாதேவி.

''மகனே! உனது வாதம் எனக்குப் பிடிக்கிறது. நான் ஒரு வழி சொல்வேன். அதன் மூலமாகத்தான் நீஅரச ஆதரவுடன்சொர்ண சுந்தரியை மணக்க முடியும். ஒருவிதத்தில் அமைச்சர் மகள். ஆயினும் உனது தந்தை ரசனைக்கு அடிமையாகிறவர். ரசனையுள்ளவர்களுக்கு இதயம் இருக்கும். வா, நாராயணப் பட்டரைப் போய்ப் பார்ப்போம்.''

அதிராஜ சோழனது நெஞ்சு அதிரசமாய் இனிக்கிறது.

அபயன் — மனுகுல தீபன்—விருதராசப் பயங்கரன் — முதலாம் குலோத்துங்க சோழ மகா சக்கரவர்த்திகளுக்கே வியப்புக் கலந்த வேதனையைத் தந்தது அந்தச் செய்தி.

எந்த விதக் காரணமும் இல்லாமல் ஓய்வு வேண்டி எதற்காக அமைச்சர் திரு நாராயணப்பட்டர் தமது பிறப்பிடமாகிய *திரிபுவனி நோக்கிக் குடும்பத்துடன் செல்ல வேண்டும்?

சக்கரவர்த்திகளுக்கு இந்தக் காதல் விவகாரம் முற்றுமாய்த் தெரியாது.

கலிங்க வெற்றிக்குப் பிறகு அவருக்குத் திரிபுவனத்தையே தர எண்ணியிருக்கும்போது, அவர் எதையும் பொருட்படுத்தாது போன தன் நோக்கம் என்ன?

ஆறு பௌர்ணமிகள் வானத்தில் அற்புதமாக வட்டமிட்டன.

திரிபுவனத்திலிருந்து அவசர அவசரமாகச் செய்தி வருகிறது.

சோழச் சக்கரவர்த்திகள் செய்தியைப் பார்வையிடுகிறார்.

திருநாராயணப் பட்டரிடமிருந்துதான் செய்தி.

ஏதோ ஒரு காவியம் — தமிழிலும் சம்ஸ்கிருத சுலோகங்களுடனுமாக அவர் எழுதி இருக்கிறார் என்றும், அதன் அரங்கேற்றம் அடுத்த பூரணை தினத்தன்று என்றும், அதற்கு சக்கரவர்த்திகளின் குடும்பம் வருகை தர வேண்டும் என்றும் எழுதியிருந்தார். சக்கரவர்த்திகள் வரவில்லையென்றால், தாம் இதுகாறும் பணிபுரிந்த சேவை வீணானது என்று குறிப்பிட்டிருந்தார். அந்த அரங்கேற்றத்துக்கு ஏறத்தாழ பன்னீராயிரம் பிராமணப் பண்டிதர்கள் கலந்து கொள்கிறார்கள் என்று குறிப்பிட்டிருந்தார். தலைநகரில் அரங்கேற்றினால் *ஜயங்கொண்டாரின் எதிர்ப்பு ஏற்படும். எனவே எனது பிறந்த மண்ணில் அரங்கேற்றம் என்று குறிப்பிட்டிருந்தது சிந்திக்கக் கூடியதாகவும் வரவேற்கக் கூடியதாகவும் இருந்தது. எனவே அவர் தம் குடும்பத்துடன் புறப்பட ஆயத்தமானார்.

திரிபுவனிக் கிராமமே இரண்டு கோலாகலமாக இனித்துச் சிறக்கிறது.

எங்கு நோக்கினும் புலமை மிக்க பிராமணோத்தமர்கள்.

---

* புதுச்சேரிக்கு அண்மையில் இருப்பது.
* கலிங்கத்துப் பரணி பாடியவர்

சாலை விபத்துக்களைப் பற்றி ஆராய்ச்சி செய்வதற்காக ஒரு கம்ப்யூட்டரை நிறுவினார்கள். ஏகப்பட்ட விபத்துக்களைப் பற்றிய விவரங்களை அதனிடம் கொடுத்




தார்கள். இந்த விபத்துக்களை எப்படித் தவிர்க்கலாம் என்று கேட்டனர். கம்ப்யூட்டர் சொன்னது: ''சாலைகளை நீக்கி விடுங்கள்!''

— ராமுசாமி

---

சிவன் கோவில் மண்டபம்.

அழகுற அலங்கரிக்கப்பட்டிருந்தது.

சோழ மகா சக்கரவர்த்திகள் குடும்பத்துடன் எழுந்தருளி இருக்கிறார்.

குமாரர்களில் மூத்தவன் ராச ராச சோழ கங்கனும் கடையவன் அதிராஜ சோழனும் சிற்றன்னை-பட்டத்தரசி தியாகவல்லி தேவி யாரும் மூத்தவள் பெரிய நாச்சியார் அம் மங்கா தேவியும் வருகை புரிந்திருக்கிறார்கள். திரு நாராயணப்பட்டர் இறைவனைத் தொழுது அடுத்த படியாக சக்கரவர்த்திகளை வணங்கிக் காவியத்தை அரங்கேற்றுகிறார்.

அரங்கேறிய நூல்—

"*குலோத்துங்க சோழ சரிதை.'

ஆ! என்ன அற்புதமான காப்பியம்! ஜயங் கொண்டார் எழுதி வரும் கலிங்கத்துப் பரணிக்கு இது ஈடு செய்யுமோ? அல்லது அதனினும் மீறி நிற்குமோ?

சம்ஸ்கிருத மேற்கோள்களைக் கேட்டு, அதன் ஆழம் நிறைந்த வர்ணனைகளைக் கேட்டு உடன் விளக்கும் தமிழ்ப் பாக்களைக் கேட்டு 'ஆகா, ஆகா' என்று பாராட்டாதார் யார்?

ஏதோ காப்பியம் என்று நினைக்க, இது எனது வாழ்க்கைச் சரிதமாக இருக்கிறதே...!

ஜயங்கொண்டார் கலிங்க வெற்றியைப் பாடுகிறார்....

இது குலோத்துங்கனுடையவாழ்க்கையைப் பாடுகிறதே!

அதுவும் தேவ பாஷையுடன் கூடிய சூத்திரங்களுடன்....

குலோத்துங்க சோழ சரிதை முடிகிறது.

ஒருவர் எதிர்க்க வேண்டுமே?

அந்தணர்கள் முறைப்படி அவருக்கு அபிஷேகங்களைச் செய்கிறார்கள்.

திரிபுவனிக்குக் கிடைத்த புகழ்...

சோழ சாம்ராஜ்யத்துக்கே கிடைத்தது போல....

''ஓ.... திருநாராயணப் பட்டரே! பெருமைக்குரியவனாகிறேன் இந்தக் குலோத்துங்க சோழன்! எனது முன்னோன் ராச ராச-சோழர்க்கு நாடக ரூபத்தில் சரிதம்!எனக்கோ காப்பிய ரூபத்தில் சரிதம்! இக்கணமே உங்களுக்கு சொர்ணாபிஷேகம் செய்ய ஆணையிடுகிறேன்!''

மெய் சிலிர்த்துக் கூவுகிறார் குலோத்துங்க மகா சக்கரவர்த்திகள்.

பட்டு பீதாம்பரத்துடன் எழுந்து நின்று வணங்கிய திருநாராயணப் பட்டர், ''மகா சக்கரவர்த்திகள் சமூகத்துக்கு ஒரு விண்ணப்பம்! சொர்ணாபிஷேகம் வேண்டி நான் இதனை யாக்கவில்லை'' என்றார்.

''கைம்மாறு கருதாமல் தான் யாத்து இருக்கிறீர்கள்; நானறிவேன்!''

''இல்லை சக்கரவர்த்திகளே... கைம்மாறு கருதியே இதனை யாத்திருக்கிறேன்!''

சக்கரவர்த்திகள் மட்டுமா அதிர்ந்து நோக்குகிறார்? கூடியிருந்த சகலரும் அவ்விதமாகவே நோக்குகிறார்கள்.

''பட்டரே! எதைக் கருதி இந்தக் காப்பியம்?''

''சொர்ணத்தைக் கருதி!''

''சொர்ணம்?''

''எனது மகள் சொர்ணத்தைக் கருதி!''

''மகளுக்கென்ன? வரன் கிடைத்து விட்டானா? சொல்லுங்கள். அவனுக்கு எனது சோழ சாம்ராஜ்யத்தில் எந்தப் பகுதியைக் கேட்டாலும்வரதட்சிணையாகத்தருகிறேன்!''

''வரதட்சிணையல்ல, மகா சக்கரவர்த்திகளே! 'வரன் தட்சிணை' வேண்டும்! அதுவே நீங்கள்எனக்குச்செய்யும் சொர்ணாபிஷேகம்!''

குலோத்துங்க சோழ மகா சக்கரவர்த்திகளுக்கு முதலில் புரியவில்லை. பிறகுதான் அவருக்குத் தெளிவாய்ப் புரிகிறது.

''யார் அவன்?''

தியாகவல்லி கணீரென்று சொன்னாள்: ''அதிராஜ சோழன்.''

ஒரு கணம் தயக்கம்.

ஒரு மகா காப்பியம்... தனது வாழ்க்கை வரலாறு பாடியவருக்கு...

''தந்தேன் பட்டரே!''

குலோத்துங்கசோழருடைய குரல் ஓங்கி ஒலிக்கிறது.

ஓ......

திரிபுவனியே அதிரும்படி கோஷங்கள்...

அந்த வாழ்த்தொலிகள் அடங்க வெகு நேரம் பிடித்தது.

''பட்டரே! கங்கை கொண்ட சோழ புரத்தில் முதலில் உங்களுக்குச் சொர்ணாபிஷேகம், பிறகு உங்கள் குமாரத்தி சொர்ணாவுக்கு மங்களாபிஷேகம்!''

மீண்டும் வாழ்த்தொலிகள்.

''குலோத்துங்க சோழ சக்கரவர்த்தி!''

''வாழ்க! வாழ்க!''

''மனுகுல தீப சப்தம விஷ்ணு வர்த்தனர்''

''வாழ்க! வாழ்க!''

''இராச நாராயண விருத ராச பயங்கரர்!

''வாழ்க! வாழ்க!''

விண் அதிர்ந்தது.

மண் மகிழ்ந்தது.

---

* Ins 198 of 1919.

# Kalki Shopping Page

கோவையில்

திருமண பட்டு ஜவுளிகள்
வாங்க "கைராசி"யான ஸ்தாபனம்



## கரணை
## ஜவுளி மாளிகை

ராஜ வீதி • கோயமுத்தூர்-1
போன்: கடை: 22881 • வீடு: 22624.

---

## மெட்ரோபாலிடன்
### மாவரைக்கும் இயந்திரங்கள்

- நீடித்த உழைப்பு
- நிகரற்ற அமைப்பு
- உங்கள் இல்லத்திற்கு உறுதுணையானது




அளவுகள்: 1 லிட்டர் முதல் 20 லிட்டர் வரை

**Metropolitan Industries**
72, Sastry Road, Coimbatore-641009
Phone : 32396

---

## சாலிடேர்
டெலிவிஷன்

## Solidaire



இப்பொழுது
இறக்குமதி செய்யப்பட்ட
உலகப் புகழ்பெற்ற

## சாலிடேர் சூப்பர் டீலர்

பிலிப்ஸ் படத்திரையுடன்
கிடைக்கிறது.

வழங்கும் கூடுதல் போனஸ்:-
அடக்க விலைக்கே, சாலிடேர்
FM டியூனர் கிடைக்கும்.

தொலைதூரத்தில் வசிப்பவர்களுக்கென
விசேஷ ஹை-கெய்ன் டெலிவிஷன் செட்டுகள்
ஹை-கெய்ன் ஆன்டெனாவுடன்
விசேஷ விலையில் கிடைக்கும். (குறிப்பிட்ட
அளவே இவை உள்ளன.)

**ஏஜென்ஸீஸ் & ஏஜென்ஸீஸ்**
(ஏர் கண்டிஷண்ட்)
18, தெற்கு உஸ்மான் ரோடு, தி.நகர்,
சென்னை-17. போன்: 440004, 440725

வீடியோ டீவி
வீடியோ டெக்

வீடியோ காமிரா



# வீட்டுக்கு வீடு வீடியோ!





'வீடியோ' என்றால் என்ன?

எல். ஆர். சுவாமி நிறுவனத்தைச் சேர்ந்த திரு எல். ஆர். நாராயணன் சொல்கிறார்:

''காஸெட் டேப் இருக்கிறது. செவி மூலம் கேட்டு இன்புறுவதற்கு மாத்திரம். டி.வி. போல ஒலியும் ஒளியும் இணைந்த சாதனம் வீடியோ. இதற்கான காஸெட்டுகள் தனியே இருக்கின்றன. (டேப்பை விட இரு மடங்கு பெரிதாக உள்ளது.) மூன்று மணி நேரம் ஓடக்கூடிய ஒரு காஸெட்டின் விலை ரூ. 600. இந்தக் காஸெட்டில் உள்ள டேப்பை 'வீடியோ டெக்' (ரிகார்ட் பிளேயர் மாதிரி ஒரு சாதனம்) கில் இணைத்துப் பிறகு டி. வி. திரையிலே பார்க்கலாம். வீடியோ டெக்கின் விலை சுமார் ரூ. 25000.

''இப்பொழுதெல்லாம் பெரிய மனிதர்கள் வீட்டுக் கல்யாணத்திலே வீடியோ உபயோகப்படுத்தப்படுகிறது. இதற்கென்று தனி காமெரா உண்டு. வெளிநாட்டிலிருந்து தருவிக்க வேண்டும். இந்தக் காமெராவை வைத்துச் சாதாரண சினிமா எடுக்க இயலாது'' என்கிறார் எல்.ஆர். நாராயணன்.

''ஒரு கல்யாணத்துக்கு எவ்வளவு சார்ஜ் செய்கிறீர்கள்?''

''ரூ. 4500. அவர்கள் தங்கள் வீட்டு டி. வி.யிலேயே போட்டுப் பார்த்துக்கொள்ளலாம்.''

''இதனால் டி.வி. டியூப் கெட்டுவிடும் என்று சொல்கிறார்களே.''

''அதெல்லாம் சும்மா. வாருங்கள் காண்பிக்கிறேன்'' என்று அழைத்துச் சென்றார். ஒரு குழந்தையின் பிறந்த நாள் விழா நிகழ்ச்சிகளைப் போட்டுக் காட்டினார்.

''இது இம்ப்போர்ட்டட். இங்குள்ள டி.வி.யில் பிளாக் அண்ட் ஒயிட்டாகத்தான் தெரியும்.''

''சினிமாப் படம் எடுப்பதற்கும் இதற்கும் என்ன வித்தியாசம்?''

''சினிமாவில் எக்கச்சக்க செலவு. மேலும் தாமதம் ஆகும். வீடியோவில் உடனே காண முடியும். சினிமா எனில் படம் எடுத்து, ப்ராஸஸ் செய்து, நெகடிவ் பிரிண்ட் எடுக்க வேண்டும். இரண்டரை நிமிஷத்துக்கு சுமார் ரூ. 400 செலவு ஆகுமென்றால்– நீங்களே கணக்குப் பார்த்துக் கொள்ளுங்கள்!''

''எல்லோருக்கும் வசதி இருக்காதே?''

''அந்த மாதிரி கேஸ்களில் நாங்களே எடுத்து இங்கு போட்டுக் காட்டுகிறோம். ஒரு மணி நேரத்துக்கு நூறு ரூபாய் சார்ஜ் செய்கிறோம். எடுத்த படத்தைக் காண்பிக்க மட்டுமே. அவர்கள் வீட்டிலேயே காண்பிக்க வேண்டுமென்றால் ரூ. 250.''

''எல்லாமே இம்ப்போர்ட்டட் ஆக இருக்கிறதே ஏதாவது பழுது ப[illegible]ால் சரிப்படுத்த முடியுமா?''

''இதற்கென்றே நிறைய இஞ்ஜினியர்கள் உள்ளனர். சிங்கப்பூர் போன்ற ஊர்களுக்குச் சென்று பயிற்சி பெற்று வருகிறார்கள். ஆனால் கேட்கின்ற தொகை அதிகம்தான்!''

தமிழ் நாட்டிலேயே முதல் முறையாக பஞ்சு அருணாசலம், எஸ். பி. முத்துராமன் இவர்களை வைத்து வீடியோவிலேயே ஒரு முழு நீள ஹாஸ்யச் சித்திரம் எடுக்கத் தி[illegible]டம் வைத்திருக்கிறார் நாராயணன். பலர் 'கெஸ்ட் ஆர்ட்டிஸ்டாக' நடிக்க ஒப்புதல் அளித்திருக்கிறார்களாம்.

அப்புறம் இன்னொன்று. புது முகத்துக்கு ஸ்கிரீன் டெஸ்ட் செய்து தர ஏற்பாடு செய்து இதன் மூலம் டைரக்டர்களுக்கும் புது முகங்களுக்கும் இடையே ஒரு பாலம் போல் பணி புரிகிறார். (தற்போதைக்கு இது இலவசம்.)

''சினிமாவை வீடியோ மூலம் வெளி நாடுகளுக்குக் கடத்திச் செல்கிறார்களாமே?''

''ஆமாம். அது ஒரு சிக்கல் இருக்கிறது. நீங்கள் கூடப் படித்திருப்பீர்கள். 'இளையராஜாவின் 'ரசிகை' படம் சிங்கப்பூரில் பார்த்து விட்டார்களாம்! இதைத் தவிர்க்கத் தயாரிப்பாளரே வீடியோ படத்தை எடுத்து வெளி நாடுகளுக்கு அனுப்பி விடலாம். திருட்டுத் தனத்துக்குச் சந்தர்ப்பம் தருவானேன்?''

ஒரு காலத்தில் வீட்டுக்கு வீடு ரேடியோ ஒலித்துக் கொண்டிருந்தது; இப்போது வீட்டின் மேலே 'ஆன்டென்னா' நிமிர்ந்து தெரிய டி. வி. இதைப் போல வீட்டுக்கு வீடு வீடியோ என்ற நிலைமை எதிர்காலத்தில் ஏற்படலாமே?

– பேட்டி: தமயந்தி

புகைப்படங்கள் : சபா நியூஸ் போட்டோ

# பாரதி நம்பினான் நாமும் நம்புவோம்!



திருக்கோயில்களில் தமிழில் அர்ச்சனை நடைபெற வேண்டுமென்றால், அதற்காக வடமொழியைப் புறக்கணிக்க வேண்டும் என்று பொருளல்ல.

மதம் என்பது வேறு; இனம் என்பது வேறு. நாம் இனத்தால் தமிழர்; அதே நேரத்தில் நம்மில் மிகப் பெரும்பாலோர் மதத்தால் இந்துக்கள்.

மதம் என்பது மக்களைப் பிரிப்பதற்காகவரவில்லை; பிணைப்பதற்காகவே வந்தது. தமிழன் என்று என்னை நான் எண்ணிக்கொள்கிறபோது என்னுடைய உறவினர் நாலரைக் கோடிப் பேர்தான். அதே நேரத்தில் இந்து என்று நான் என்னை எண்ணிக் கொள்ளும்போது என்னுடைய உறவினர் ஐம்பது கோடிக்கு மேற்பட்டவராகின்றனர். இந்தியா முழுவதுமே எனது தாயகமாகி விடுகிறது. இது, நான் இந்துவாக இருப்பதால் எனக்குக் கிடைக்கும் லாபமாகும்.

அதுபோல, அப்துல் காதர் என்னும் தமிழர் தன்னை இஸ்லாமியர் என்று எண்ணிக் கொள்கிறபோது உலகெங்கிலுமுள்ள 100 கோடி மக்கள் அவருடைய உறவினராகிவிடுகின்றனர். அப்படியே ஆரோக்கியசாமி என்னும் தமிழர் தன்னைக் கிறித்துவராக எண்ணிக்கொள்கிறபோது உலகெங்கும் வாழும் 100 கோடிக்கு மேற்பட்ட கிறித்துவர்கள் அவருக்குச் சொந்தக்காரராகி விடுகின்றனர்.

அப்படியே, மொழிவழிப்பட்ட இனவுணர்வு கூட மக்களைப் பிணைக்கிறதே யொழிய, பிரிக்கவில்லை. தமிழ் நாட்டிலுள்ள ஆரோக்கியசாமி, அப்துல் காதர், ஆராவமுது அய்யங்கார், முத்துசாமி முதலியார், அமாவாசை ஆகியோர் ஒருவருக்கொருவர் அண்ணன்—தம்பிகளே யொழிய அன்னியரல்லர். இப்படிப் பார்த்தால் ஒரு இனத்துக்குள்ளே பல மதங்கள் இருக்கின்றன என்பதையும் ஒரு மதத்துக்குள்ளே பல இனங்கள் இருக்கின்றன என்பதையும் நாம் உணர முடியும்.

பல மொழி பேசும் பல்வேறு இனங்கள் ஒரு மதத்தால் பிணைக்கப்படுகின்றன என்றால், அந்தப் பிணைப்பால் தோன்றிய மதத்தவருக்கு ஒரு பொது மொழி தேவைப்படுகிறது. அப்படித்தான் இந்துக்களுக்கு சம்ஸ்கிருதமும், இஸ்லாமியருக்கு அரபும், கிறித்துவருக்கு லத்தீனும் மத மொழிகளாகத் தோன்றியிருக்கின்றன.

இந்தப் பின்னணியைக் கொண்டு பார்க்கும்போது, மத ஒருமைப்பாட்டுக்குக் கேடில்லாமல் சமஸ்கிருத லத்தின் அரபு அல்லது உருது மொழிகளைப் புறக்கணிக்காமல் தமிழ் மொழியின் உரிமைகளைக் காக்க வேண்டிய கடமை நமக்கு இருக்கிறது. அது அனுபவசாத்தியமும் கூட! அது போல் தமிழ் மொழியின் உரிமைக்கும் வளர்ச்சிக்கும், கேடில்லாத வகையில் யாரும் தங்கள் தங்கள் மத மொழி வளர்ப்பதை நாம் அனுமதிக்க முடியும்.

சுப்பிரமணிய பாரதி மத ஒருமைப்பாட்டுக்கும், மதவழிப்பட்ட பொது மொழிக்கும் கேடில்லாத வகையில் தமிழை வளர்க்கவும் தமிழ் மொழியின் வளர்ச்சிக்குக் கேடில்லாத வகையில் மத மொழிகளின் வளர்ச்சிக்குப் பாதுகாப்பளிக்கவும் முடியும் என்று நம்பினான். அதனால் நானும் நம்புகிறேன். நீங்களும் நம்பவேண்டுமென்று எதிர்பார்க்கிறேன்.

அப்துல் காதர் அரபு மொழியைக் கைவிட மாட்டாரென்றால், அந்தோணிசாமி லத்தின் மொழியை மறக்க மாட்டாரென்றால், ஆராவமுதனிடம் மட்டும் சமஸ்கிருதத்தை மறக்கவேண்டும் என்றுகேட்க எனக்கு உரிமை உண்டா?

பாரதியின் பெயரால் வேண்டுகிறேன். மத மொழிக்கும் இன மொழிக்குமிடையே சமரசம் காண முயலுங்கள். தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் தமிழ் ஒன்றுதான் மக்களுடைய அன்றாட வாழ்க்கை மொழி. ஆகவே சமரச உணர்வு கொண்டு மத மொழிகளை அங்கீகரித்துக் கொள்வதால் தமிழ் மொழி அழிந்துவிடும் என்று யாரும் அஞ்சத் தேவையில்லை.

தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் அர்ச்சனை தமிழில் நடைபெற வேண்டும் என பாரதி சொல்வது, சம்ஸ்கிருத மொழியின் பால் வெறுப்புக் கொண்டு அல்ல; மதப் பற்றுடைய தமிழருக்கு அத்தகைய வெறுப்புக் கூடாது. தமிழில் அர்ச்சனை செய்தால் கோயில் பூசாரி என்ன சொல்கிறார் என்பது பக்தனுக்குத் தெரியும். பக்தனைக் காதிருந்தும் செவிடனாகச் செய்வதா தெய்வவழிபாடு? அதனை பாரதி வெறுத்தார். அதற்காக, பூசாரியை அவர் குறை கூறுகிறார். இதோ, பாரதி சொல்வதைக் கேளுங்கள்:

"கோயில் குருக்களுக்கு இனி நம்முடைய தேசத்து ஜனங்கள் ஒத்து நடக்க வேண்டுமானால் ஜனங்களிடம் பூசாரிகள் எதையும் மறைக்காமல், எந்த விஷயத்திலும் ஜனங்களை ஏமாற்றாமல், விஷயத்தைச் சொல்ல வேண்டும்."

"இனி" என்னும் தலைப்பிட்டு எட்டயபுரம் கவிஞர் எழுதியுள்ள உரை நடைக் கட்டுரை ஒன்றிலே இந்தப் பகுதியைப் பார்க்கிறோம்.

**ம.பொ.சி**

(மயிலை இலக்கிய வட்டம் பாரதி வித்யா பவனச் சொற்பொழிவிலிருந்து)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

நீங்களே கணக்கிட்டு பாருங்கள்!

300 கிராம்
ரூ. 3.20

# ஒரு சாதாரண டிட்டர்ஜண்ட் சலவை கட்டியை விட எடையோ இரண்டு மடங்கு விலையோ சிலகாசுகள்தான் அதிகம்

# டோட்டல்

## நீல டிட்டர்ஜண்ட் சலவை பார்







சுலபமான
சலவைக்கு
5 சிறிய பகுதிகள்

உண்மையான முதல்
டிட்டர்ஜண்ட் பார்!
டோட்டல், நீல டிட்டர்ஜண்ட்
சலவைக் கட்டியின் அதிக
வெண்மையையும், சலவை
பார் சோப்பின் சௌகரியத்தையும்
கொடுக்கிறது.

*சிக்கனமாக சலவை செய்ய இதை 5 சிறிய
பகுதிகளாக்கி உபயோகிக்கலாம்.*

எடையோ இரண்டு மடங்கு
*விலையோ சில காசுகள்தான் அதிகம்!*

*நீங்கள் 125 கிராம் எடையுள்ள சாதாரண டிட்டர்ஜண்ட
கட்டியை என்ன விலைக்கு வாங்குகிறீர்கள்?*
300 கிராமின் விலை ரூ. 3.20 என்றால் 250 கிராம் டோட்டலின்
விலை ரூ. 2.67 தான். அதாவது ஒரு சாதாரண சலவைக்
கட்டியைவிட எடையோ இரண்டு மடங்கு,
விலையோ சில காசுகள் தான் அதிகம்.

தமிழ் நாடு, பீஹார் மற்றும் ஆந்திர பிரதேஷ் மாநிலங்களில் மட்டும் கிடைக்கும்.

MCA-TDB-51-Tam

---

கர்நாடக சோப்ஸ் அண்டு டிட்டர்ஜெண்ட் லிமிடெட் அளிக்கும் தரமான தயாரிப்பு
விற்பனை செய்பவர்கள் : மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிட்., பெங்களூர்.

REGISTERED No. M. 4092
Registered as a Newspaper in Sri Lanka

## மொரார்ஜீ ஃபேப்ரிக்ஸ்

# ஏனென்றால் டிசைன்கள் எவ்வளவுதான் கண்ணுக்கு அழகாக இருந்தாலும் நல்ல அடிப்படை அம்சங்கள் அவசியம் இருக்க வேண்டும்

நீங்கள் மொரார்ஜீ மில்ஸ் வழங்கும் துணிகளை வாங்கும் போது பகட்டான டிசைன்கள், எடுப்பான வண்ணங்களுக்கு மேலான ஒன்று உங்களுக்குக் கிடைக்கிறது. அதுதான அவற்றின் தரம். அந்த உயர்வான தரம்தான் மொரார்ஜீ செய்யும் ஒவ்வொரு இழையுடனும் கவனமாக பின்னப்பட்டு உருவாக்கப் பட்டுள்ளது. இன்று அது நூறு ஆண்டுகளுக்கும் மேலாக பூரணத்வம் பெற்று அற்புதக் கலையாக விளங்குகிறது.

ஏனென்றால் நாங்கள் டிசைன்கள் எவ்வளவுதான் கண்ணுக்கு அழகாக இருந்தாலும் நல்ல அடிப்படை அம்சங்கள் அவசியம் இருக்க வேண்டும் என்று உறுதியாக நம்புகிறோம்.

சூட்டிங்குகள் • ஷர்ட்டிங்குகள்
• புடவைகள்
• ட்ரெஸ் மெட்டீரியல்கள்




தி மொரார்ஜீ கோகுல்தாஸ் ஸ்பின்னிங் & வீவிங் கம். லிட்.
டாக்டர் அம்பேத்கர் ரோடு, பரேல், பம்பாய் 400 012.

Contour Ads-MM-33g/81 Tam

# மொரார்ஜீ மில்ஸ்